# கசடதபற

ஒரு வல்லின மாத ஏடு

ஆசிரியர் : நா. கிருஷ்ணமூர்த்தி



## பெரியசாமி தீர்க்கிறான்

என்ன செய்வ திந்தக் கையை
என்றேன். என்ன செய்வ தென்றால்
என்றான் சாமி. கைக்கு வேலை
என்றி ருந்தால் பிரச்னை இல்லை;

மற்ற நேரம்—நடக்கும் போதும்
நிற்கும் போதும், இந்தக் கைகள்
வெறும் தோள் முனைத்தொங் கல், தாங் காத-
உறுத்தல் வடிவத் தொல்லை

என்றேன். கையைக் காலாக் கென்றான்.

—வே. மாலி

மே 1971
30 காசு

8

ஓவியம் : கே. தாமோதரன்

# ஜன்னல்

நா. சேதுராமன்

வெளியே வெய்யில் கொளுத்தியது. காற்று நன்றாக வீசிக் கொண்டிருந்தது அதனால் உள்ளே அவ்வளவு உஷ்ணம் இல்லை. கூரையைப் பார்த்தான். ஓலைகள் காய்ந்து காற்றடிக்கிற வேகத்திலே தூள் தூளாகக் கொட்டிக் கொண்டிருந்தன. இவன் கண்ணிமையின் மேலும் ஒருதடவை விழுந்தது. எடுத்துப் போட்டான். மழை காலம் வருவதற்குள் வேறு ரூம் பார்த்துக் கொண்டு போய்விடவேண்டும். இல்லையென்றால் தாக்குப் பிடிக்காது என்று நினைத்துக் கொண்டான்.

புஸ்தகத்தின் வரிகளிலே கண்கள் ஓடிக் கொண்டிருந்தன. மேஜையிலிருந்த பத்திரிகை ஊதி ஊதி வீசிய காற்றிலே படபடவென்று வினோதமாக சப்தமிட்டுக் கொண்டிருந்தது. இவனுக்கு அந்த சப்தம் இடைஞ்சலாயிருப்பது போல் இருந்தது. உதட்டை நெளித்து வெறுப்புடன் அந்தப் பத்திரிகை படபடத்துக் கொண்டிருப்பதை முறைத்துப் பார்த்தான். புஸ்தகத்தில் விரலை வைத்து மூடிக் கொண்டு தலையை தூக்கி எதிர்வீட்டு ஜன்னலைப் பார்த்தான்.

ஜன்னல் வெறிச்சென்று திறந்திருந்தது.

சடக்கென்று எழுந்து மேஜையண்டை போனான். இவன் கிட்ட வருவதைப் பார்த்ததும் பத்திரிகை அலறுவதுபோல் படபடப்பதாக இவனுக்குத்தோன்றியது. கனமான புஸ்தகத்தை எடுத்து அதன் மேல் வைத்தான். திரும்பவும் படுத்துக் கொண்டு புஸ்தகத்தை விட்ட இடத்திலிருந்து படிக்க ஆரம்பித்தான். சிறிது நேர அமைதியில் காற்றுவீசும் சப்தத்தைத் தவிர வேறு சப்தம் இல்லாதிருந்தது அவனுக்கு வெறுமையைத் தோற்றுவிப்பதாக இருந்தது. பத்திரிகை பறக்கிற சப்தம் இருந்தால் நன்றாக இருக்கும் என்று தோன்றியது. எழுந்து வெயிட்டுக்காகவைத்த அந்தப் புஸ்தகத்தை எடுத்து விடலாம் என்று நினைத்தான்.

ஜன்னல் வெறிச்சோடி இருந்தது.

மறுபடியும் புஸ்தகத்தைப் படிக்க ஆரம்பித்த போது நண்பன் வீட்டுக்குப் போய் விட்டு வரலாம் என்று தோன்றியது. ஆனால் இந்த வெய்யிலில் வெளியே போனால் முகம் கருத்துவிடும், சாயந்திரம் போய்க் கொள்ளலாம் என்று நினைத்தான்.

ஜன்னலின் வெறுமை மறுபடியும் அவன் கண்களில் விழுந்தது.

சடக்கென்று எழுந்து புஸ்தகத்தை மூடி வைத்தான். இந்த வெயிலில் வெளியே போனால் வந்து குளிக்க வேண்டியிருக்கும் என்று நினைத்துக் கொண்டான். சாயந்திரமே போய்க் கொள்ளலாம் என்று நினைத்து லுங்கியைச்சரியாகக் கட்டிக்கொண்டு ஹேங்கரில் இருந்த ஷர்ட்டை எடுத்து மாட்டிக் கொண்டான். தலைவாரிக் கொள்ளும் போது கண்ணாடியில் ஜன்னலின் வெறுமை தெரிய வெளியே கிளம்பினான்.

தெருவில் போகும்போது நண்பன் வீட்டில் இருப்பானா என்று சந்தேகப்பட்டான். சரி, இந்த வெயிலில் வெளியேபோகமாட்டான் என்று நினைத்துக்கொண்டு வேகமாக நடந்தான். சே, இந்த வெயிலில்வெளியே வந்தது தப்பு என்று நினைத்துக் கொண்டான்.

ஜன்னலைப்பற்றி நினைத்துக்கொண்டான். மூன்று வருடங்களுக்கு முன்னால் அவன் ஆபீஸில் அவனுக்கு ஏற்பட்ட ஒருதலைக் காதல் ஞாபகத்திற்கு வந்தது. சிரித்துக் கொண்டான். மழைக் காலத்திற்குள் வேறு ரூம் பார்த்துக் கொண்டு போவது தனக்கு பிடிக்கவில்லை என்று நினைத்துக் கொண்டான்.

திடீரென்று திரும்பிப் பார்த்ததும் நண்பன் வீட்டைத்தாண்டி கொஞ்சதூரம் வந்துவிட்டதை அறிந்தான். லுங்கியை மடித்துக் கட்டிக் கொண்டு கிடுகிடுவென்று நண்பன் வீட்டை நோக்கி நடந்தான். பொடியன் எவனாவது வெளியே இருந்தால் சொல்லியனுப்பலாம் என்று நினைத்து சுற்றும் முற்றும் பார்த்தான். ஒருவனும் காணவில்லை.

இவனே மாடிப்படி ஏறினான். நண்பனைப் பெயர் சொல்லிக் கூப்பிட்டான். இரண்டு முறை கூப்பிட்டான். சந்தடியே காணோம். இவனுடைய குரல் இருண்ட படிகளில் எதிரொலிப்பதுபோல் இவனுக்குத் தோன்றியது. திரும்பிப்போய் விடலாம் என்று நினைத்தான். ஆனால் மறுபடியும் பெயர் சொல்லிக் கொஞ்சம் சப்தமாகக் கூப்பிட்டான். யாரோ நடந்து வரும் ஓசை கேட்டது. இவன் அவன்தான் என்று நினைத்து முகத்தைத் தூக்கி கண்களை விரித்தான். ஆனால் நண்பனுடைய அம்மா வந்ததும் கண்களை படக்கென்று தாழ்த்தினான். அவன் இல்லை என்று அவள் சொல்லியதுபோல் நினைத்துக் கொண்டு கீழே இறங்கினான். அவனுடைய அம்மா அழகாயிருக்கிறாள் என்று நினைத்துக் கொண்டான்.

வெளியில் வந்து, நழுவிய லுங்கியை மறுபடியும் மடித்துக்கட்டினான். வெய்யில் சுரீரென்றுமண்டையில் அடிப்பது போல் இருந்தது. அவன் இல்லாதது இவனுக்குக் குழப்பமாக இருந்தது தாகம் எடுப்பதுபோல் இருந்தது. அடுத்த தெருவிலிருக்கும் இன்னொருவனைப் பார்க்கலாம் என்று நினைத்துக் கொண்டான். அவனுடைய வீட்டுக்குப்போய் பல மாதங்களாகிறது என்ற நினைவும் வரவே வேகமாக் நடந்தான்.

அந்த வீட்டு மாடிப்படிகளில் ஏறும்போது இந்த மாடிப்படிகள் பரவாயில்லை என்று நினைத்துக் கொண்டான். உள்ளேபோய் குரல் கொடுத்தான். நண்பன் வந்து கதவைத் திறந்தான். உள்ளே நுழைந்ததும் அங்கே தேடிப்போனவன் இங்கே உட்கார்ந்திருப்பதைக் கண்டது இவனுக்கு ஆச்சரியமாய் இருந்தது. போய் பக்கத்து சேரில் உட்கார்ந்து கொண்டான். அவன் வீட்டுக்குப் போனதை அவனிடம் சொல்லலாமா என்று நினைத்தான். அவனுடைய அம்மா ஞாபகத்திற்கு வந்தாள். அதனால் சொல்லவில்லை என்று நினைத்துக் கொண்டான். தண்ணீர் கொண்டு வரும்படி திரும்பி இவனிடம் சொன்னான். அவன் எழுந்து தண்ணீர் கொண்டுவர உள்ளே போனான்.

அப்போது இவன் 'வீட்டுக்குப் போனியா' என்று கேட்டான். இவன் சுவரில் மாட்டியிருந்த படங்களைப் பார்த்துக் கொண்டே அவன் அந்த மாதிரி கேட்டானா என்று நிச்சயப் படுத்திக் கொள்ள முயற்சித்தான். அதற்குள் உள்ளே போனவன் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தான். அவனுடைய அம்மா உள்ளே யிருந்து வந்து தன்னைப் பார்ப்பதற்குள், இங்கிருந்து இவனைக் கூட்டிக் கொண்டு போய்விட்டால் தேவலை என்று இவனுக்குத் தோன்றியது. அதற்குள் அவர்களிருவரும் ஏதோ பேசுவதுபோல் இவனுக்குப் பட்டது.

இவனையும் அவர்கள் ஏதோ கேட்டதற்காக, இவன் பதில் சொல்லியதைக் கேட்டு அவர்கள் சிரித்ததைப் பார்த்தபொழுது இவனுக்கு ஆச்சரியமாய் இருந்தது. எழுந்து லுங்கியை உதறிக் கட்டிக்கொண்டான். இவன் கிளம்பி விட்டதைப்போல் பட்டதால் அவனும் எழுந்து கொண்டதுபோல் இவனுக்குத் தோன்றியது. இருவரும் அவனிடம் விடை பெற்றுக் கொண்டு வெளியே வந்தார்கள். இவன், தான் இன்னும் சாப்பிடவில்லை என்ற நினைவு திடீரெனத் தோன்ற நின்றான் 'மணி என்ன?' என்று கேட்டான். அவன் 'ரெண்டு இருபது' என்றான். இப்பொழுது ஓட்டலில் சாப்பாடு இருக்காது என்று நினைத்துக் கொண்டான்.

வெற்றிலைப் பாக்குக் கடையில் நின்று நாலு வாழைப்பழம் வாங்கி அவனிடம் இரண்டைக் கொடுத்துவிட்டு இவன் இரண்டைச் சாப்பிட்டான். இவனுக்கு சோடா குடிக்கலாமா என்று தோன்றியது. ஆனால் இப்போதுதான் நிறைய தண்ணீர் குடித்திருக்கிறோம் என்று ஞாபகத்திற்கு வரவே அப்படியே திரும்பினான். இவன் அவனிடம் பேசத் திரும்பியபோது அவன் பக்கத்தில் இல்லாதது திடுக்கென்றது. இவன் பார்வையை ஓட்டியபோது, அவன் அப்போதுதான் கடை பிளாட்பாரத்திலிருந்து இறங்கிக் கொண்டிருப்பது தெரிந்தது. இவனுக்கு சட்டென்று, தான் வாழைப்பழத்திற்குப் பணம் கொடுக்கவில்லை என்று ஞாபகத்திற்கு வரவே, வருத்தமாக இருந்தது. நண்பன் சிரித்துக் கொண்டே வந்தான்.

இவன், 'அடாடா நான் மறந்துட்டேன். நீ காசு கொடுத்திட்டியா' என்றான். அவன் 'பரவாயில்லை' என்று ஒரு சிகரெட்டை இவனிடம் நீட்டினான்.

இரண்டு பேரும் நடந்தார்கள். அவனுடைய வீடு வந்ததும் அவன் இவனை உள்ளே கூப்பிட்டான். இவன் இன்னொருநாள் வருகிறேன் என்று சொல்லி விட்டு அவனிடம் விடைபெற்றுக் கொண்டு ரூமுக்கு நடந்தான். கொஞ்ச தூரம் வந்ததும், தான் அவனுடைய வீட்டிற்குப் போயிருந்ததை சொல்லாமலிருந்தது தப்பு என்று நினைத்துக் கொண்டான்.

வீட்டிற்கு வந்து ஷர்ட்டைக் கழற்றி கொடியில் போட்டான். கண்ணாடியில் பார்த்தான். முகமெல்லாம் எண்ணெய் வழிந்து கருப்பாயிருந்தது. உடல் கசகசத்தது. குளிக்கவேண்டும் என்று நினைத்துக் கொண்டான். ஜன்னலைப் பார்த்தான். வெய்யில் அதன் மேல் உறைய, மூடிக் கிடந்தது. ஜன்னல் திறப்பதற்குள் குளித்துவிடலாம் என்று நினைத்தான். வந்து கட்டிலில் படுத்துக் கொண்டான். வேர்வை நனைந்த உடம்பில் காற்று பட்டது சுகமாக இருந்தது. ஜன்னல் திறப்பதற்குள் எழுந்து குளித்துவிடலாம் என்று நினைத்தான்.

வெயில் தாழ்ந்து மறைய ஜன்னல் திறந்தது. இவன் தூங்கிக் கொண்டிருந்தான்.

---

## பள்ளிகொண்ட புரம்

ஆசிரியர்: நீல. பத்மநாபன். வாசகர்வட்ட வெளியீடு, சென்னை-17. விலை: 6·75.

"போர்க்களத்துப் பிணங்களைப் போல்,
மனிதஉடல்கள் தாறுமாறாய்க்கிடந்து
நித்திரை கொள்ளும் தரித்திர கோரம்..."

விமர்சகர்களால் இலக்கியத்தரமான நாவலாசிரியர் என்று ஏற்றுக்கொள்ளப்பட்ட நீல. பத்மநாபனின் இரண்டாம் நாவல் இது. இவருடைய முதல் நாவலான 'தலைமுறைகள்' தமிழில் நல்லநாவலென்று ஒருமுகமாகப் பெயர் பெற்றதே இவருக்கு தரமான ஆசிரியர் என்ற பெயரைத் தேடித்தந்தது. கேரளாவின் சூழலை சமூகப் பழக்கங்களை வைத்து எழுதும் இவர் எழுத்து தமிழுக்குப் புதிய பரிணமத்தைச் சேர்க்கும்படி அமைகிறது. மொழியால் இலக்கியம் வளர்கிறது; இலக்கியத்தால் மொழி வளர்கிறது. இலக்கிய வளர்ச்சிக்கு தன்மொழியால் இவர் உதவிக் கொண்டிருப்பவர். சமுக இயல் பார்வையை அடிப்படையில் கொண்டிருக்கின்றது இவர் எழுத்து. அதன் அழுத்தமான பதிப்பு 'தலைமுறைகளில்' தெரிந்தது. அதுவே 'தலைமுறைகளை' மேன்மைப் படுத்திற்று. பள்ளிகொண்ட புரத்திலும் இவருடைய அடிப்படை நோக்குத் தென்படுகிறது. ஆனால், அதுவே நாவலாக இல்லாமல் வேறுபட்ட பல பார்வைகளின் அழுத்தம் இடத்திற்கு இடம் மாறுகின்றன. இது நாவலை வெகுவாகப் பாதித்திருக்கிறது.

அனந்தன் நாயரின் மனைவி அவரை விட்டு, ஆணும் பெண்ணுமாய் இரண்டு குழந்தைகளை விட்டு விக்ரமன்தம்பி என்ற தாசில்தாரைச் சேர்ந்ததை வைத்து, குழந்தைகள் இருவரும் வளர்ந்து தனி சமூக வாழ்நர்களான நிலையில், ஒருநாள் விடியுமுன்னிருந்து, மறுநாள் விடிவை நோக்கும் நேரம்வரை கிட்டத்தட்ட 48 மணி நேரத்தில் தூக்கத்தில் கழிந்து சில மணி நேரங்களைத் தவிர்த்த பொழுதில் அனந்தன் நாயரின் மனப் போராட்டமாய் நாவல் நடத்தப்பட்டிருக்கிறது.

அவராக இருந்த நேரயோசனைகள், பார்த்தவை தூண்டும் நினைப்புக்கள், சந்தித்தவர் கிளப்பிய உரையாடல்கள், தன் மக்களிடத்தில் பேசி தீர்வு

கான முனைந்தவை என்று நடத்தப்படுகிறது. ஆரம்பத்தில் நாயர் சமூகப் பழக்கங்கள் ஒரு சமூக இயலாளனின் நோக்குடன் இந்நாவலில் ஆராயப்படப் போகிறது என்ற வாசகர்களின் எதிர்பார்ப்பை ஏமாற்றி நாலாந்தர தமிழ் நாவலின் கதைப்போக்கில் நாவல் திரும்பிவிடுகிறது. அங்கங்கே மட்டும் அவருடைய அடிப்படைப் பார்வை தலைகாட்டி வாசகனின் முழு நம்பிக்கை இழப்பிலிருந்து அவரை மீட்கின்றது.

ஓடிப்போன தன் மனைவியை நினைந்து நினைந்து அழுங்கும் ஒரு கணவனின் நினைவுகள் ஒரு முக்கிய கட்டப் பிரதிபலிப்பாக வேண்டியதற்குப் புறம்பாக எழுதப்படுகிறது. அவள் போன இடத்தில் அதிருப்தியுற்றுத் திரும்பி வருவதாக, இவர் ஆன்மீக மார்க்கத்தில் ஈடுபாடு கொண்டு ஒரு பிரமாதமான புரிந்து கொள்ளலில் அமைதி கொண்டிருந்த நேரத்தில் இவரிடம் கேட்டதற்கு இவர் அங்கேயே தங்கி இருக்கும்படி உள்ளக் கிளர்ச்சியில்லாது சொன்னது நாவலில் இவர் மன ஓட்டத்தில் எந்தப் பாதிப்பையும் காட்டவில்லை.

பிரசவ, மயான வைராக்கியங்களாகக் கடந்து போகிற சாதாரண மன நிலையாக அவள் அவரை முதல் முறை, விலகிப் போன பிறகு வந்து சந்தித்த சம்பவமும் சித்தரிக்கப்படவில்லை. அது வாழ்க்கையைப் பிரமாதமான ஒரு புரிந்து கொள்ளல் அவர் அமைதி கண்ட விதமாக வாசக மனம் நம்பும்படி அழுத்தமாக சித்தரிக்கப்படுகிறது. மற்ற இடங்களில் சாதாரணமனிதனின் போராட்டங்களில் கிடந்து அழுங்குகிறார் அனந்தன் நாயர். அவர் மனப்போராட்டத்திற்கு ஆளாகி இருந்தும், பல இடங்களில் மனோதத்துவ உண்மையோடு ஒட்டியிருந்தும், இந்தச் சந்திப்புகள் பாதிப்பு முடிவில் வெளியிடப் படும்போது மொத்த மனோதத்துவத்திற்கு முரணாகி முன் போனவைகளை பாதித்து அவரை உருட்சிப்படுத்தாது தட்டையாகக் காட்டுகிறது. இந்தச் சந்திப்பை ரகசியமாகக் காப்பாற்றி, தாயை மகனும் மகளும் சந்தித்து முடிவில் வெளிப்படும்போது நாவல் முடிவுக்காகக் காப்பாற்றியது போல் நினைக்கத் தோன்றுகிறது.

மகன் அம்மாவை நிந்திக்காமல் தனி சமூக வாழ்நாளில் தீர்க்கத்தோடு ஏற்றுக் கொள்வதும், பெண் அம்மாவை இதே தீர்க்கத்தில் நிந்தித்து தந்தையை ஏற்றுக் கொள்வதும், ஃபிராய்டின் பெண் தந்தையை மகன் தாயை விரும்பும் மனோதத்துவ விவகாரங்கள் என்று எண்ணத் தூண்டுகின்றன. ஆனால், அவை மறைவாக இருந்தும் சூசகமற்று, நாவலைப் பாதிக்காமல் அந்தக்கட்ட ஆசிரிய மனநிலையில் எழுதியதுபோல் தோற்றம் கொள்கிறது. இதற்கு மாறாக மகள் தாயையும், மகன் தந்தையையும் ஏற்றுக் கொள்வது என்றால் 'நூலைப்போல சேலை; தாயைப்போல புள்ளே'' 'தாயேதண்ணித்துறையிலே பாத்தா பெண்ணெ வீட்டுலே பார்க்க வேண்டாம்' என்னும்வியாக்யான சாத்தியத்திற்கு ஆளாக்குகிறது என்பதை ஏற்றுக் கொண்டேதான், அவர் எழுதிய விதம் ப்ராய்டின் வழியில் வாசக (இன்னொரு) வியாக்யானத்திற்கு இடமளிப்பதாக, துருத்தலாக அன்றி ஒளிப்பரவலாக நாவலில் காட்டப்பட்டிருந்தால் கன மேற்பட்டிருக்கும் என்றும் தோன்றுகிறது.

அனந்தன் நாயரின் அக்காள் பையன் (ஆன்மீகம்) உருவான அளவு மகன் உருவாகவில்லை. அவன் ஆன்மீகத்தில் துளைபவனால் இவன் வாழ்க்கையைப்பற்றித் திடமான ஒரு கொள்கையுள்ளவனாக இருக்கிறான். இருப்பதை இருக்கிறபடியே ஏற்றுக் கொள்ளும் மனநிலையுள்ள இவன் உருவாகாமல் போனதும் இதற்கு நாவலில் இடமில்லாது போனதும் ஒரு உருவச் சிதைவு.

தாய், தந்தை, மகன், மகள் உள்ளப் போராட்டம் விரிவுபடவில்லை. முடிவில் கொண்டு குறுக்கப்படுகிறது. இது நாவல் முழுதும் வியாபகம் கொண்டிருக்கலாம் என்று அங்கங்கே எண்ணத் தோன்றும் பல பார்வைகள் நாவல் முழுதும் தென்படுகின்றன.

ஆன்மீகப் பார்வை வந்து போகிறது; வியாபிக்கவில்லை. எல்லாவற்றிற்கும் மேலாகப் பள்ளிகொண்டபுரம் என்ற தலைப்பின் வியாக்யானமாகவும் பரிணமிக்கவில்லை. ஆனால், கதை சொல்ல ஏற்றுக்கொண்ட உத்தி பள்ளிகொண்டபுரமாக வியாக்யானம் கொள்ள உதவக்கூடிய உத்தி. ஆரம்பத்தில் பின்பற்றப்பட்டு பின்னர் நழுவிவிடுகிறது. பள்ளிகொண்டபுரம் ஒரு பிரதேசமாக இன்றி உலகாக விரிந்ததாகவும் இல்லை.

இவர் மிகவும் பிரக்ஞையுள்ள ஆசிரியர். மகள் தன்சிநேகிதி இறந்த சம்பவத்தைப் பற்றித்தந்தையிடமும் அண்ணனிடமும் சொல்லும்போது உணர்ச்சி வசப்பட்டுச் சொல்கிறாள். அண்ணன் சொல்கிறான் 'ட்டு ஸெண்டி மெண்டல்' என்று. அவள் 'இருக்கலாம் சேட்டே...! பெண்கள் எங்க வாழ்க்கையே ஸெண்டிமெண்டலாகத்தானே இருக்குது' ... பிறகு விலாஸினியும், நானும் மட்டும் விதிவிலக்காகவா போகிறோம்...?' என்பது ஆசிரியர் வாசகனுக்குச்சொல்லும் சமாதானமாகத் தோன்றுகிறது. ஆசிரியரின இப்பிரக்ஞை நிலை ஆக்கபூர்வமாக நாவல் முழுதும் காட்டப்பட்டிருக்க வேண்டும்.

இவ்விதமாகக் கேள்விகள் கேட்கத் தோன்றாமல் எழுத்தாளனுக்கு யோசனை சொல்லத் தோன்றாமல், எழுதியதை எழுதிய விதமாகவே ஏற்றுக்கொள்ள வைப்பதுதான் எழுத்தின் வெற்றி. இத்தனைக்குப் பிறகும் ஒன்று மாறாமல் நிற்கிறது. அது அவர் எழுத்து தமிழுக்குப் புதிய பரிணாமத்தைச் சேர்க்கும் உண்மை. அவர் தன் அடிப்படைப் பார்வையில் புரிந்துகொண்டு, அதை முற்றிலும் எழுத்தில் கொண்டு வருவாரானால் அவர் வெற்றிமுழுமையாகும்.

இவ்விமர்சனத்தைக் கொண்டு எந்தத் தீவிர வாசகர்களும் பள்ளிகொண்டபுரத்தைப் படிப்பதற்குத் தயங்க வேண்டியதில்லை. நாவலாக அது வெற்றி பெறவில்லை என்று நான் நினைப்பதற்கு மேலாக வாசகர்கள் தெரிந்துகொள்ள வேண்டிய பல விஷயங்கள் அதில் இருக்கின்றன.

— ந. முத்துசாமி.

---

## அநாசாரம்

வண்டோடு சம்போகம்
செய்து விட்டுக்
குளிக்காமல்
கடவுள் தோளேறும்
மாலைப் பூ.

—நீலமணி

# வருகை

நா. கிருஷ்ணமூர்த்தி

டாக்ஸி வாசல்படியை ஒட்டிக்கொண்டு நின்றது. அவன் நிதானமாக டாக்ஸியிலிருந்து இறங்கி, புத்தகங்களை எடுத்து மார்போடு அணைத்துக் கொண்டு, குனிந்து மீட்டரைப் பார்த்தான். எட்டு ரூபாய்க்கு மேலே ஓடியிருந்தது. அவன் பத்துரூபாய் நோட்டை எடுத்துக் கொடுத்தான்.

"சில்லறை இல்லையே சார்" என்றான் டிரைவர்.

அவன் ஏறிட்டுப் பார்த்தான். பிறகு பைக்குள் கையைவிட்டுத் துழாவி, நோட்டுக்களும், சில்லறையுமாக எடுத்தான். புத்தகங்களை டாக்ஸியில் வைத்துவிட்டு, கணக்காகக் காசை எண்ணிக் கொடுத்துவிட்டு நோட்டை வாங்கிக் கொண்டான்.

டிரைவர் வேகமாக டாக்ஸியில் ஏறி உட்கார்ந்து கொண்டு, படாரென்று கதவை அடித்துச் சாத்தினான். அவன் பின் சீட்டிலிருந்து புத்தகங்களை எடுத்துக் கொண்டான். டாக்ஸி ரொம்பவும் வேகமாகத் திரும்பியது. 'இத்தனை வேகமாக ஏன் இவன் ஓட்டுகிறான்' என்று தனக்குத்தானே கேட்டுக் கொண்டு அவன் வீட்டிற்குள் சென்றான்.

குனிந்து எழுதிக் கொண்டிருந்த அவன் அம்மா காலடி ஓசை கேட்டு நிமிர்ந்தாள். "வந்துட்டியா ரகு" என்றாள். அவன் தலையசைத்தபடியே மாடிப்படிகளை நோக்கிச் சென்றான். அவன் தாயார் அவசரம் அவசரமாக டிராயரைத் திறந்தபடியே "லெட்டர் இருக்கு ரகு" என்றாள்.

அவன் திரும்பி அவளருகில் செல்வதற்குள் அவளே அவனருகில் வந்தாள். அவன் கடிதங்களை வாங்கிப் பார்த்தான். ஒன்று அழைப்பிதழ்; இன்னொன்று கடிதம். "வஸந்த குமார் எழுதியிருக்கிறான்" என்று சொல்லிக் கொண்டான்.

"வேறெ லெட்டர் உண்டாம்மா?"

"இல்லே இதான்"

"நீ என்னவோ எழுதிண்டிருக்கியே"

"நம்ப சாந்தாவுக்குத்தான். அவளுக்கு ரொம்ப நாளாச்சு லெட்டர் போட்டு"

அவன் தலையை மட்டும் ஆட்டினான். பதில் பேசவில்லை. இன்னொருமுறை தலையை அசைத்துக் கொண்டு "எழுது அம்மா" என்று சொல்லிவிட்டு மாடிக்குப் புறப்பட்டான்.

"காபி கொண்டு வந்து தர்றேன். சாப்ட்டுட்டுப் போயேன்"

"கையைக் கடுக்கிறது. மேலே அனுப்சுடேன்" அவன் வேகமாகப் படிகளில் ஏறினான். சீட்டி அடித்துக் கொண்ட கதவைத் திறந்து கட்டிலில் புத்தகங்களைப் போட்டான். கைகளை மாறி மாறி உதறிக் கொண்டான். கையில் வரிவரியாகக் கோடு பதிந்திருந்தது.

ஃபானைப் போட்டான். கட்டிலில் வந்து உட்கார்ந்து கொண்டான். அவனுக்குக் காற்று போதவில்லை. எழுந்துபோய் ஃபுல் ஸ்பீடுக்கு ஃபானைத் திருப்பி வைத்துவிட்டு வந்தான். கட்டிலில் மல்லாந்து படுத்துக் கண்களை மூடிக் கொண்டான்.

ஃபான் கிர்கிர்ரென்று மூளைக்குள் சுழல்வது மாதிரியிருந்தது. அவன் கண்களைத் திறந்து, வேகமாக ஒரே சீராக மார்புக்கு நேராக, மேலே சுழலும் ஃபானையே பார்த்துக் கொண்டிருந்தான். பின் சட்டைப் பையினுள் கையைவிட்டுநான்கணா நாணயத்தை எடுத்து ஃபானை நோக்கிப் போட்டான். காசுஃபானில் பட்டுத் தெறித்துச் சென்றது. அந்த ஓசையை ஒரு கணம் திடீரென்று கேட்டான். அவ்வளவுதான். காசு சென்ற இடம்தெரியவில்லை. எழுந்துஉட்கார்ந்து கொண்டு சுற்றுமுற்றும் பார்த்தான். காசு தென்படவில்லை. கைகளை முறுக்கிக் கொண்டான்.

லைப்ரரி புத்தகங்களைத் தனியாகவும், தான் வாங்கிய புத்தகங்களைத் தனியாகவும் பிரித்தான். தான் வாங்கி வந்த புத்தகங்களில் கே. ரகுநாதன் என்று கையெழுத்திட்டு தேதியைக் குறித்து, கீழே ஒரு கோடு வேகமாக இழுத்தான். பச்சை மையில் அந்தக் கோடு அழுத்தமாக விழுந்தது. பேனாவை உதறிக் கொண்டான்.

சமையற்காரப் பாட்டி டிபனும், காபியும் கொண்டு வந்தாள். அவள் மேஜைமேல் வைப்பதற்குள், "காபியை இப்படிக்கொண்டாங்கோபாட்டி"என்றான்.

அவள் டிபனை முன்னே வைத்தாள்.

"வெறும் காபி போறும்"

பாட்டி ரொம்ப தயங்கித் தயங்கி, "கொஞ்சம் எடுத்துக் கோயேண்டாப்பா" என்றாள்.

அவன், "இன்னொரு காபி வேண்டுமானாகொண்டு வாங்கோ பாட்டி" என்றான்.

பாட்டி அவனை இரக்கத்தோடு பார்த்தாள்.

"நல்ல ஸ்ட்ராங்கா கொண்டாங்கோ" என்றான்.

பாட்டி கீழேசென்றாள். அவன் மேஜைடிராயரைத் திறந்து ஒரு சிகரெட்டை எடுத்துவாயில் வைத்துக் கொண்டு நெருப்புக் குச்சியைக் கொளுத்தினான். பற்றிய குச்சி காற்றில் அணைந்தது. அண்ணாந்து பார்த்தான். ஃபான் வேகமாகச் சுழன்று கொண்டிருந்தது. எழுந்துபோய் வேகத்தை மட்டுப் படுத்தினான் ஜன்னல் பக்கத்தில் நின்று கொண்டு குச்சியை உரசி வெகு கவனமாக சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டான்.

பாட்டி காபி கொண்டு வந்தாள். அவன் சிகரெட் புகையை ஊதிவிட்டு "பிளாஸ்க்லே கொட்டி வெச்சுடுங்கோ" என்றான்.

பாட்டி மெல்லிய குரலில், "சூடு கம்மி" என்றாள்

"பரவாயில்லே"

அவன் வந்து நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான். இன்னொரு முறை சிகரெட்டை உறிஞ்சினான். விரல்கள் தரையில் ஒரே சீராகத் தாளமிட்டன. அன்றைக்கு எல்லாமே ஒருவிதமான புதுமையாகக் காட்சியளித்தன அவனுக்கு. கடிதத்தின் நினைவு

வந்தது. எழுந்துபோய் புத்தகத்திலிருந்து பிரித்தெடுத்தான். வஸந்தகுமார் எழுதியிருந்தான். அவன் அதை முழுவதும் படிக்காமலேயே கீழே வீசியெறிந்தான். 'அவனுக்கு வேலேயே இல்லே. மகா அறுப்பு —' என்று முணுமுணுத்துக் கொண்டு ஜன்னலருகில் போனவன் திரும்பி வந்து கட்டிலில் சாய்ந்துபடுத்துக் கொண்டு, வஸந்தகுமாரின் கடிதத்தை எடுத்துப் படித்தான். பிறகு மிகவும் சிரத்தையாக அதைக் கிழித்துக் குப்பைத் தொட்டியில் போட்டுவிட்டு தான் கொண்டு வந்திருந்த புத்தகத்தை எடுத்து மேலோட்டமாகப் பார்வையிட்டான். பக்கங்களைத் தள்ளினுன். ஓரிடத்தில் அவன் பார்வை நிலேத்தது. அவன் படிக்க ஆரம்பித்தான்.

''பீட்டில்ஸாக இருப்பதை நான் விரும்பவில்லே. அந்த வாழ்க்கை அர்த்தமற்றது; பயனில்லாதது. இனி எஞ்சியிருக்கும் நாட்களில் உழைக்கவும், வாழ்வின் அர்த்தத்தைக் காணவும் விரும்புகிறேன்.

''இப்போது நான் எதிர்காலத்தைப் பற்றிச் சிந்தித்துக்கொண்டிருக்கிறேன். அதை எடுத்துச்சொல்ல நாட்கள் ஆகலாம்.'' ஆனுலும் நான் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன்.

''நம்பிக்கை ஊட்டுவது இந்துமதத் தத்துவமே.''

அவன் சிரித்துக் கொண்டான். நம்பிக்கைஊட்டுவது... நம்பிக்கை ஊட்டுவது...நான் கிறிஸ்தவன் அல்ல. லிவர்பூல் வாசி அல்ல. ஒரு பாடகனுமில்லே. நான் ரகுநாதன். இந்து. பூர்ணத்தின் பூரணம். எது அண்டமாக வியாபித்திருக்கிறதோ அதுவே நான். எனக்கு வெளியில் எதுவுமே இல்லே. நான்...நானே... இந்த உலகமாக இருக்கிறேன்.

கடிகார மணிஅடித்தது. அவன் எழுந்து ஜன்னல் பக்கம் சென்ருன். திரைச்சீலேயைத் தள்ளி விட்டான். தோட்டத்தில் தென்னே மட்டை காற்றில்அசைந்தது. காற்றின் வேகத்திற்கு ஏற்ப, தாழ்ந்து, உயர்ந்து சென்றது. மூட்டை லாரி ஒன்று வேகமாகக் கரும் புகையை விட்டுக் கொண்டு போனது. அவன் அதையே பார்த்துக் கொண்டு நின்ருன்.

---

## விதி

அந்திக் கருக்கலில்
இந்தத் திசை தவறிய
பெண் பறவை,
தன் குஞ்சுக் காய்,
தன் கூட்டுக்காய்,
அலேமோதிக் கரைகிறது.
எனக்கதன்
கூடும் தெரியும்,
குஞ்சும் தெரியும்.
இருந்தும் எனக்கதன்
பாஷை புரியவில்லே.

—கலாப்ரியா

ஒரு கார் வந்து வாசலில் நின்றது. ஹாரன் அடித்தது. அப்புறம் டிரைவர் ஸீட்டில் இருந்தவன் கீழே இறங்கி கதவைத் திறந்து விட்டுவிட்டு காரை உள்ளே எடுத்துக் கொண்டு வந்தான்.

''நீதானு?'' என்று அவன் சொல்லிக் கொண்டான்.

அவன் காரிலிருந்து இறங்கினுன். அவன் கூட ஒரு பெண். இந்த முறை அவன் கூட யார்?... ஹேமாவா...உஷாவா...அனுராதாவா ... ஷோபனுவா அவன் ஜன்னல் கம்பியைப் பற்றிக் கொண்டே நின்றிருந்தான். சாலேயில் ஒரு ஆட்டோ படபடவென்று சப்தம் போட்டுக் கொண்டே சென்றது. அவன் திரும்பிவந்து உட்கார்ந்து கொண்டான். கண்களே மூடிக் கொண்டான்.

'அவனுக்கு இதிலெல்லாம் சாமர்த்தியம் உண்டு. சாமர்த்தியமா? எதிரியின் பலவீனத்தை ஒரு நொடியில் கண்டு கொண்டு வெறியேற்றி உருகவைத்து விடுவது—அதுதான் அவன் இயல்பு ஒவ்வொருமுறையும் அவன் வரும்போதெல்லாம் யாரோ ஒருத்தி அவனிடம் வீழ்ந்து விடுகிருள்...'

''ரகு வேணு வந்திருக்கான்''

அவன் மௌனமாயிருந்தான்.

''அம்மா கீழே வரச் சொன்னு.''

அவன் திரும்பி ''சரி'' என்ருன். ஆனுல் எழுந்திருக்கவில்லே. காலே நன்ருக நீட்டிக் கட்டைவிரலே மடக்கினுன். சட்டையை இழுத்துவிட்டுக் கொண்டு, நன்ருகச்சாய்ந்து உட்கார்ந்து ஒரு புத்தகத்தைக் கையில் எடுத்துக் கொண்டான். அவன் கண்ணும், மனமும் புத்தகத்தில் பதிந்தது.

''ஹலோ ரகு''

அந்தக் குரல் அறை முழுவதும் நிறைந்தது அவன் எழுந்து நின்ருன். அப்பொழுதுதான் பார்ப்பது போல, ''வா வா'' என்று உற்சாகத்தோடு வரவேற்ருன்.

வேணு கட்டம்போட்ட சட்டையை இழுத்துவிட்டுக் கொண்டு உள்ளே நுழைந்தான். அவன் கூடவே அவள் மிகுந்த அடக்கத்தோடு வந்தாள். அவளே எங்கோ பார்த்தது மாதிரி அவனுக்குத் தோன்றியது. பல்கலேக் கழக லேப்ரரியிலா, பிரிட்டிஷ் கவுன்சிலிலா, அவனுக்குச் சரியாக நினேவில்லே. ஆனுல் அவள் முகம், அந்த நடை அவனுக்குப் பழக்கமாகத்தான். இருந்தது அவளுக்காக ஒரு பிரம்பு நாற்காலியை இழுத்து முன்னுல் போட்டான்.

''உட்காருங்கள்''

அவனே விசித்திரமாகப் பார்த்துக் கொண்டே அவள் உட்கார்ந்தாள். வேணு காலரை நிமிர்த்தி விட்டுக் கொண்டு, ''பெரிய மாமா சேஷாத்திரியோட பெண் பிந்து'' என்ருன்.

''உம்.'' அவன் அவள் பக்கமாகத் திரும்பி தலேயசைத்தான்.

''நீ நிக்கிறியே'' என்று மோடா மீது கிடந்த பத்திரிகைகளேயும், புத்தகங்களேயும் அள்ளி மேஜை மீது போட்டுவிட்டு ''உட்கார் வேணு'' என்ருன்.

அவன் நன்ருக உட்கார்ந்து கொண்டு, '' எப்படி இருக்கே ரகு?'' என்ருன்.

அவன் வேணுவை ஏறிட்டுப் பார்த்தான்.

''எப்படியென்ருல்—அப்படியேதான் இருக்கேன்'' என்ருன்.

வேணு பெரிதாகச் சிரித்தான்.

''பிந்து, இவன் பியூர் இண்டலெக்சுவல்—''

'' ஓ ''

''நீ எப்ப வந்தே?''

''இரண்டு நாளாச்சு. ஒரு மாச லீவு''

''மத்தியானம் மவுண்ட்ரோடிலே பார்த்தேன்''

''அடடே நான் பார்க்கலியே—ஏன் கூப்பிடறதுக்கென்ன?''

''சிக்னல் விழுந்துடுத்து. நீ போய்ட்டே''

''பிக்சருக்குப் போயிருந்தேன்''

அவன் மீசையைத் தடவி விட்டுக் கொண்டே ''உங்களை எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கு'' என்ருன் பிந்துவிடம்.

''நானும் அதான் முழித்துக் கொண்டிருக்கேன். மாக்ஸ் முல்லர் பவனத்தில்.....''

''யெஸ்... நினைவிற்கு வரது''

''ஜெர்மன் படிக்கிறியாடா?''

''உம்''

''நான் போட்ட லெட்டருக்கெல்லாம் நீ பதிலே போடலியே''

''போடனும்ன்னு தான் ஒவ்வொருநாளும் நினைச்சுக்குவேன். ஆனு எழுதத்தான் முடியறதில்லே''

''பிந்து பிராம்ட்டா எழுதுவா''

'உம்'என்றுதலையசைத்தவன், ''இஃப் யு டோன்ட் மைன்ட்'' என்று சிகரெட்டை எடுத்து பற்ற வைத்துக் கொண்டு, வேணுவிடம் சிகரெட்பெட்டியைநீட்டினுன். அவன் சிகரெட்டை எடுத்து பற்ற வைத்துக்கொண்டு புகையைஊதிக்கொண்டே ''வேலையை விட்டுட்டியாமே—''என்று கேட்டான்.

அவன் பேசாமல் பிந்துவையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''அம்மா ரொம்ப வருத்தப்படரு—ஆமாம் வேலையை விடும்படியா என்ன நடந்தது?'' என்ருன் வேணு.

அவன் அணைந்திருந்த சிகரெட்டை மறுபடியும் கொளுத்திக் கொண்டு குச்சியை வீசியெறிந்தான். புகையை உறிஞ்சி இழுத்தான். பிந்துவை நோக்கிப் புகையை ஊதினுன். அவள் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். அவன் காரணத்தைத் தேடிக்கொண்டு இருப்பது மாதிரி வேணுவிற்குத் தோன்றியது.

அவன் கனைத்துக் கொண்டான். ''சொன்னு நம்புவியா நம்ப மாட்டியா என்று தெரியாது. ஆனு நீ நம்பணும்கிறது அப்படியொன்றும் முக்கியமில்லே—''

பிந்து அவனைக் குத்திட்டுப் பார்த்தாள்.

''ஆபீஸர் நாளைக்குக் காம்ப் போக வேண்டும் என்ருன். நாளைக்கு என்றதும் எனக்கு மகா எரிச்சலாய் இருந்தது. நாளைக்கா என்றேன். ஆமான்னுன். சண்டை பிடிக்க வேண்டும் போலத் தோணித்து. நாளைக்கு சினிமாவிற்குப் போறேனே என்றேன்.

## சத்திய தரிசனம்

திருவிழாக் கூட்டத்தில் அவள்
பின்னழகு கண்டு
பல கெஜங்கள் துரத்தி சில கிழங்களைத்
தள்ளிவிட்டு
முன்னுக்கு வந்து முகம் நோக்கும் போது...
ஐயோ இந்தத் திருடிக்கு ஏன் 3D?

—ஆர். சுப்பிரமணியன்

---

அவன் என்னை விசித்திரமாப் பார்த்தான். 'உனக்கென்ன பைத்தியமா பிடிச்சிருக்கு? நான் சீரியஸா காம்ப்புக்குப் போக வேண்டும் என்கிறேன். நீ சினிமாவிற்குப் போறேங்கிறியே வாட் ஹாப்பன்ட் ட்டு யூ?'' என்ருன்.

''சர்க்கார் வேலைதானே. சாவகாசமாகப் பார்த்துக் கொள்ளலாம். ஆனு சினிமா நாளைக்கு விட்டாப் போய்விடும் என்றேன். அவனுக்குக் கோபம் வந்துடுத்து. என்னபேசறது என்றே தெரியலே. நாளைக்குக் காலம்பற எட்டரை மணிக்கு ஜீப் ரெடியாயிருக்கும். வந்துடணும் என்ருன். நான் பதிலே பேசலே. கட்டாயம் வந்துடணும்என்ன. மந்திரி பத்துமணிக்கெல்லாம் வந்து விடுவார். நாம முன்னுடியே இருந்தாகணும் என்ருன். நான் வராட்டா என்றேன். அவன் ஒன்றும் சொல்லலே. மறுநாள் சினிமாவிற்குப் போனேன்.

''படம் ரொம்ப ஜோர். பார்க்கும்போது எனக்குத் தோணித்துவாழ்க்கையிலே இணைப்பு—பந்தம் என்கிறதெல்லாம் அர்த்தமற்றதுதான். நாமாகக் கற்பித்துக் கொள்ளுவதுதான். இந்தப் படத்தைப் பார்க்காம ஒரு பட்டாளம் மந்திரி பின்னல் நாய் மாதிரி ஓடுகிறது. நானும் அப்படியே ஓடறதா? கொஞ்ச நாள் ஓடின நால்திடீர்ன்னு நின்று விட்டது. அவ்வளவுதான்—''

''அடமென்ட் டைப் நீ''

''அவன் பைத்திய மென்ருன். நீ அடமென்ட் என்கிறே. இதைக் கேட்பதற்கு எவ்வளவு சந்தோஷமா இருக்குத் தெரியுமா?''

''அப் நார்மலா இருக்க நீ ஆசைப்படறே''

''அதில் என்ன தப்பு. நீ ஒரு விதத்திலே அப்நார்மல். நான் ஒரு விதத்திலே. மிஸ். பிந்து ஒரு விதத்திலே—am I correct, Miss. Bindhu?''

அவள் அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். ''நீங்க சொல்வதிலே கொஞ்சம் நிஜம் இருக்கிற மாதிரிதான் எனக்குப் படுகிறது''

''ஒத்துக்கணும்கிறது. விஷயமே இல்லே. மனசுக்குத் தெரிந்தா போறும். மிஸ்டர் வேணு... வாட் டு யு ஸே?'' என்ருன்.

வேணுவிற்கு, பிந்து அவன்பக்கம் சாய்ந்துவிட்டது வியப்பளித்தது. 'எப்படி ஒரு பைத்தியக்காரனேடு இவளும் சேர்ந்து கொண்டாள்' என்று தன்னையே கேட்டுக் கொண்டான்.

''ஆரோக்கியமற்ற மனே வியாதிக்காரர்கள்—இருண்ட அறையையே உலகமாகப் பாவித்து மயங்கு

## சாத்தானும்...

தொலைவில்,

புணரும்—தண்டவாளங்கள்

அருகில் போனதும்

விலகிப் போயின.

—கலாப்ப்ரியா

---

கிறவர்கள்—தேசத்தை ஒரு முறை சுற்றிப் பார்ப்பார்களானல் மனோ ஆரோக்கியம் ஒருவேளை ஏற்படலாம்."

"அநுசரி கடைசியா எழுதியிருந்த கடிதத்தில் ஃபீல்டு ஏரியாவில் இருக்கிறதாகத்தானே எழுதியிருந்தே?"

"யெஸ். உனக்கு நல்ல ஞாபக சக்தி"

"நானொரு அடமென்ட் ஃபெலோ" அவன் பிந்துவைப் பார்த்துச் சிரித்தான். பிறகு வேணுவின் பக்கம் திரும்பி "வார் எங்கே யிருந்து தொடங்கியது. ராம குண்டத்திலிருந்துதானே?" என்று கேட்டான்.

வேணு ஆச்சரியப்பட்டான். 'இதெல்லாம் இவனுக்கு எப்படித் தெரிகிறது. சரியானப் புத்தகப் புழு. ஒவ்வொரு புத்தகமா, பேப்பரா நெளிந்து கண்டு கொள்கிருனு?"

அவன் விரல்களால் மேஜையைத் தாளமிட்டுக் கொண்டே, "நீ ஒரு ரோமலா மாறியிருப்பே" என்ருன்.

வேணு அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமலேயே, "எல்லாம் அமைதியா—வழக்கம் போலவே இருந்தது. கொஞ்சம்கூடப் படபடப்பு இல்லை."

"உம்—"

"இரவு மெஸ்ஸிலிருந்து திரும்பிவந்தோம். எட்டு மணியிருக்கும். எங்கள் பிரிவு கிளம்புவதற்கு உத்திரவு கிடைத்தது. ஓ! அதை எப்படி விவரிப்பது. என் மனசு துடித்தது. கை பரபரத்தது. நான் ஃபீல்டு ஏரியாவுக்குப் போகிறேன். டாங்குகள் நகர்கின்றன. லாரிகளும் ஜீப்புக்களும் பறக்கின்றன—"

பிந்து இரண்டு பேரையும் மாறி மாறிப் பார்த்தாள்.

"—இரவெல்லாம் பயணம். குன்றுகளையும், பள்ளங்களையும் கடந்து சென்ருேம். சப்பாத்தி—கள்ளிக் காடு. கரடு முரடான பாதை. எங்களுக்குச் சுமார் இருநூறு அடிகளுக்கு அப்பால் எதிரி சாவு என்கிற நினைப்பே போய்விட்டது. சீறிக் கொண்டு வரும் பீரங்கியின் நெருப்பு ஜ்வாலை—"

"உன்னிடம் கவிதை உணர்ச்சி இன்னமும் இருக்கு. ஏதாவது எழுதி வைத்திருக்கிருயா?"

"இதைக் கேளு ரகு. ஒவ்வொரு நாளும் காவு கொடுத்துக் கொண்டே கொஞ்சம் கொஞ்சமா முன்னேறிச் சென்ருேம். ஒவ்வொரு அடி முன்னேற்றமும் எங்கள் உயிரை வாங்கிவிட்டது. யுத்தமென்ருல் அதுதான் யுத்தம். எங்கள் கண்களுக்கு முன்னே எல்லாம் நடந்தது..."

அவன் எழுந்து நின்ருன். கைகளால் தலையைக் கோதிக் கொண்டான். மெல்ல நடந்து ஜன்னல் பக்கம் சென்ருன்.

வேணுவின் குரலில் உணர்ச்சி மண்டியது. எழுந்து அவன் பின்னுலேயே சென்று, "நீ மட்டும் அந்த இடத்தில் இருந்திருப்பாயானுல் — வாழ்க்கையின் அர்த்தத்தைக் கண்டிருப்பாய்" என்ருன்.

அவன் சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு, "உன்ஞல் எப்படி உணர்ச்சிவசப் படமுடிகிறது" என்று கேட்டான்.

வேணு பதிலொன்றும் சொல்லாமல் திரும்பி வந்து உட்கார்ந்து கொண்டான். 'இவனைப் பார்க்கவே வந்திருக்கக் கூடாது' என்று அப்பொழுது அவனுக்குத் தோன்றியது.

அவன் ஜன்னல் அருகிலிருந்து திரும்பிப் பார்த்தான். வேணு சோர்ந்து போய்விட்டது தெரிந்தது. அவனைப் புண்படுத்தி விட்டதாக நினைத்துக் கொண்டான். அவன் அருகில் வந்து, "பல விஷயங்களில் என்னுல் யாரோடும் ஒத்துப்போக முடியறதில்லே" என்ருன்.

"அதுதான் தெரிகிறதே"

"நீ என்னைப் புரிந்து கொண்டிருக்கே"

அவன் உட்கார்ந்து கொண்டான்.

"வெளியே போகலாமா?"

"தாராளமாக"

அவன் எழுந்து கொண்டான்.

வெளியில் வரும்போது பிந்து அவன் காதில் மட்டும் படும்படியாக "யு ஆர் ய வெரி இண்டரஸ்டிங் பர்ஸனலிட்டி" என்று சொன்னுள். அவன் கண்களை இடுக்கிக் கொண்டு அவளைப் பார்த்தான். அவள் சிரித்துக் கொண்டு படபடவென்று மாடிப் படிகளில் இறங்கினுள். அவனும் அதே வேகத்தில் அவளைத் தொடர்ந்து சென்ருன்.

"புறப்பட்டுட்டேளா?" என்று அவன் தாயார் கேட்டாள்.

"கொஞ்சம் வெளியிலே போய்விட்டு வந்துடறேம்."

"சரி."

டிரைவர் சீட்டில் வேணு ஏறி உட்கார்ந்து கொண்டான். பிந்து பின்னுல் ஏறிக் கொண்டாள். அவன் இரண்டு பேர்களையும் பார்த்தான்.

"கம் இன்"—பிந்து கதவைத் திறந்தாள்.

அவன் அவள் பக்கத்தில் சற்றுத் தள்ளி சாய்ந்து உட்கார்ந்து கொண்டான். வேணு காரைக் கிளப்பினுன்.

"பிந்து பீச்சுக்குப் போகலாமா?"

அவள் தலையசைத்தாள்.

"சந்தடியில்லாத இடமா பார்த்துப் போ" என்ருன் அவன்.

"பீச்சுக்கு சாதாரணமா வர்றதே இல்லையா?"

"பீச்சு ஒரு சந்தை மாதிரிதானே இருக்கு"

"ரொம்ப தனிச்சிருக்க ஆசைப்படுகிறீர்கள்" என்றாள் பிந்து.

"தனித்திருப்பது என்பதுதான் உண்மை. ஒவ்வொருவனும் அப்படித்தான் இருக்கிறான். பீச்சிலே எவ்வளவோ பேர். ஆனால் யார் கிட்டேயும் பேச முடியறதில்லே. யார்கிட்டேதான் பேச முடியும். தெரிந்த ஒரு முகத்துகிட்டேதான். அறிமுகம் இல்லாத வரையில்—எனக்கு என்ன சம்பந்தம் இருந்தது உன்னிடம்—"

அவள் தலையை ஆட்டினாள்.

வேணு காரை நிறுத்தினான். மூவரும் இறங்கி மணலில் நடந்து சென்றார்கள். அலைவரையில் சென்றார்கள். அவன் வேணுவைப் பார்த்துக் கேட்டான். "அலையைப் பார்க்கும்போது உனக்குப் போரின் நினைவு வர்லியா?"

வேணு விசித்திரமாக அவனைத் திரும்பிப் பார்த்தான். பிறகு மெல்ல இல்லையென தலையசைத்தான். "நான் யுத்தத்தைக் கண்ணால் கண்டவன். யுத்தம் புரிந்தவன்"

"சிகரெட் குடிக்கிறீயா?"

அவர்கள் மண்ணில் உட்கார்ந்தார்கள். பிந்து இருவருக்குமிடையில் நடைபெறும் ஒரு போராட்டத்தை மிகவும் ரசித்தாள். அவளுக்கு அது புதுமையாகவும், சுவாரஸ்யமாகவும் இருந்தது. ஆனாலும் ஏன் தன் மனம் இப்படி அடித்துக் கொள்கிறது—ஒரு பக்கமாய்ச் சாய்கிறது என்பது அவளுக்குத் தெரியவில்லை. பல விஷயங்களில் அவனோடு இணைந்து போவது அவளுக்கு ஆச்சரியமளித்தது.

அவர்கள் இருவரும் விடாமல் போராடிக் கொண்டிருக்கும்போது மழை இலேசாகத் தூர ஆரம்பித்தது. பிந்துதான், "அடடே மழை வந்து விட்டதே" என்று எழுந்தாள். அவளைத் தொடர்ந்து இருவரும் எழுந்தார்கள். அவன் காரின் முன் சீட்டில் உட்கார்ந்து கொண்டான். வேணு பிந்துவை ஓர கண்ணால் பார்த்துக் கொண்டே வண்டியை ஸ்டார்ட் செய்தான். மழை பெரும் தூரலாக விழுந்தது. அவன் தலையை வெளியே நீட்டிக் கொண்டே வந்தான்.

"மழை பெய்கிறது" என்றாள் பிந்து.

"நனைகிறது ரொம்ப ஆனந்தமா இருக்கு. இப்ப கார்மட்டும் இல்லாவிட்டா நனைந்து கொண்டே வீட்டுக்குப் போவேன்" என்றான்.

வேணு பெரிதாகச் சிரித்தான்.

"நேரே வண்டியை கீழ்ப்பாக்கத்திற்குத்தான் விட வேண்டும்".

"ஒருநாள், மழையிலே இரண்டு மணி நேரம் நனைந்தேன். மனசுக்கு ரொம்ப திருப்தியா இருந்தது. அதுதான் விஷயம். நீ என்னை எங்கே விட்டாஎன்ன, நான் நானாக இருக்கிறவரைக்கும்—"

வலுத்த மழை குறைந்தது. பெரும் தூரல்கள் சிறு தூரல்களாயின. கார் வீட்டின் முன் நின்றது. அவன் இறங்கிக் கொண்டான். கார் புறப்பட்டது.

அவன் மாடிக்குச் சென்றான். ஜன்னல் கதவுகளைத் திறந்து வைத்துக் கொண்டு நின்றான். விட்டிருந்த மழை மறுபடியும் பொழிய ஆரமபித்தது. காற்றும் மழையும் ஒன்றாயின. சாரல் உள்ளே வீசியது. அவன் மேலெல்லாம் தண்ணீர். அவன் சட்டை நனைந்து குளிர ஆரம்பித்தது.

காலுக்குக் கீழே தண்ணீர் தேங்கியது. அந்தத் தண்ணீரை நாலாப் பக்கமும் எற்றி விட்டான். தண்ணீர் சிதறி, புத்தகங்கள்—பத்திரிகைகள் மேலெல்லாம் தெறித்தது. அவன் இன்னும் இன்னும் என்று தண்ணீரை எற்றிவிட்டுக் கொண்டே இருந்தான். சுவரெல்லாம் நனைந்து தண்ணீர் வழிந்தது. குளிர் எடுத்தது. உடல் தளர்ந்து வெடவெடவென்று ஆட ஆரம்பித்தது. நனைந்த கட்டிலில் போய்ப் படுத்தான். இரவின் பிற்பகுதியில் கடுமையான தலைவலியும், சோர்வும் வந்தது. அநேகமாக பிரக்ஞையற்ற நிலையில் இருந்தான்.

காலையில் காபி கொண்டு வந்த பாட்டி அவன் நிலையைக் கண்டு பதறிப்போய் விட்டாள். அவள் மனது அடித்துக் கொண்டது. அவன் தாயார் டாக்டருக்குப் போன் பண்ணினாள். அவளுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. அவன் பக்கத்தில் உட்கார்ந்து மௌனமாக அழுதுகொண்டிருந்தாள்.

டாக்டர் வந்து அவனை வேறொரு படுக்கைக்கு மாற்றச் சொன்னார். மருந்து கொடுத்தார். "ஒன்றுமில்லை பயப்பட வேண்டாம்" என்றார். ஆனாலும் அவளுக்கு நம்பிக்கை வரவில்லை. விரக்தியோடும், கவலையோடும் பகல் முழுவதும் அவன் அருகிலேயே உட்கார்ந்திருந்தாள். மாலையில் அவனுக்கு சுயநினைவு வந்தது. காப்பி சாப்பிட்டான்.

அவள் கண்ணீர் உகுத்தாள். அவன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு ரொம்பவும் தணிந்த குரலில், "இப்படி அழறது எனக்குப்பிடிக்கறதில்லே" என்றான். அவள் பயந்து போய் சட்டென்று கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

"நான் அழலேடா" என்றாள்.

அவன் "பேப்பர் வந்திருக்கா?" என்று கேட்டான்.

அவள் எழுந்து கீழே சென்றாள். பாட்டி பேப்பரைக் கொண்டு வந்து கொடுத்தாள்.

ஜுரம் நின்று மூன்று நாட்களாகிவிட்ட பின்னும் அவன் பலவீனமாகவே இருந்தான். மாடி ஏறி இறங்குவது கஷ்டமாக இருந்தது. பிந்துவிற்கு போன் பண்ணலாம் என்று ஒரு முறை நினைத்தான். ஆனல் கீழே போக வேண்டுமே என்று விட்டு விட்டான். அடுத்தநாள் உடம்பு கொஞ்சம் தேறியது. ஆனால் போன் பண்ணும் எண்ணத்தை விட்டு விட்டான். 'நான் ஏன் அவளுக்குப் போன் பண்ண வேண்டும். அவளுக்கும் எனக்கும் என்ன சம்பந்தம். அவள் யாரோ—நான் யாரோ—'

அவன் படுத்துக் கொண்டிருக்கும்போது பிந்து வேகமாக உள்ளே வந்தாள். அவன் அவளைக் கவனிக்கவில்லை.

---

## விழிப்பு

பல்லுமிருந்து

பசியுமெடுப்பதால்

சீப்பு—தினமும்

என் முடியைத் தின்கிறது.

—கலாப்ரியா

அவள், "ரகு" என்றாள்.

அவன் திரும்பிப் பார்த்தான். ஆச்சரியப்பட்டான். "பிந்துவா" அவன் எழுந்து உட்கார முயற்சித்தான். அவள் தடுத்து அவனைப் படுக்க வைத்தாள்.

"ஜுரம்னு தெரியாது..."

அவன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"என்னவோதோணித்து. போன் பண்ணினேன். அம்மா சொன்னா. என்னால தாங்கவே முடியலே—" அவள் அவனை ஊடுருவி நோக்கி, "ரொம்ப முடியாமப் போயிட்டுதா" என்று தணிந்த குரலில்கேட்டாள்.

அவன் அடக்கமாகச் சிரித்தான். எழுந்து, தலையணையை முட்டுக் கொடுத்து, சாய்ந்து உட்கார்ந்து கொண்டான்.

"மழை உங்களுக்கு ஒத்துக்கலே"

"வேணு வரவில்லையா—"

"அவன் பெங்களூர் போய்ட்டான்"

அவன் தலையை ஆட்டிக் கொண்டான்.

அவள் அப்படியும் இப்படியுமாகப் பார்த்துவிட்டு "யு ஹாவ் லாட் ஆப் புக்ஸ்" என்றாள்.

"ஆர் யு இன்ட்ரஸ்டட் இன் புக்ஸ்"

அவன் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான்.

"இந்த அறையே ஒரு லைப்ரரி மாதிரி இருக்கு—"

"இதுதான் என் உலகம்"

"ஓ" அவள் கலீரென்று சிரித்தாள். ஆனால் மறுகணமே தான்சிரித்திருக்கக்கூடாதுஎன்பதை உணர்ந்தவளாக அவன் பக்கம் திரும்பி, "ஐ யாம் ஸாரி" என்றாள். அவன் பதிலொன்றும் சொல்லாமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"இதனாலதான் வேலையை விட்டுட்டேளா?"

"டு யு ஸ்டில் திங்க்—ஐயாம் ஃபிட் ஃபார் ஜாப்—"

அவள் தலையசைத்தாள்.

சமையற்காரப் பாட்டி காபி கொண்டு வந்தாள்.

"பிந்து சாப்பிடு"

அவன் ஹார்லிக்ஸ் குடித்தான்.

"உடம்பு ரொம்ப பலஹீனமாயிருக்கு"

"நன்றாகச் சாப்பிடணும்"

"சரி சாப்பிடுகிறேன். நீ ஜெர்மன் படிக்கிறியா"

"ஒரு மாசமாப் போறேன்"

"இப்பதான் ஆரம்பிச்சிருக்கே. வேணு எப்ப வருவான்"

"பத்து நாளாகும்"

"டென் டேஸ்" என்றான் அவன்.

மறுநாளும்—மறுநாளும் அவள் வந்தாள். அவள் வருகை அவனுக்கு இதமளித்தது. சிதறிக் கிடந்த புத்தகங்களை எல்லாம் அவன் அடுக்கி வைத்தான். பேப்பரை மடித்து வைத்தான். அவன் எழுந்து நடமாட ஆரம்பித்த பின்னால் ஒருநாள் பிந்து "வெளியே போய் வரலாமா" என்று கேட்டாள். அவன் உடனே சம்மதித்தான். வாசலுக்கு வந்ததும் டாக்ஸி பிடித்தார்கள். அவன் "படம் பார்க்கப் போகலாமா" என்று கேட்டான். அவள் "பீச்சுக்குப் போகலாமே" என்றாள். அவன் அதற்கு வேகமாகத் தலையாட்டினான். பிறகு மெதுவாக அவள் முகத்தைப் பார்த்துக் கொண்டே "வேணு இருந்தா—"என்றான்.

அவள் அவனை ஒரு கணம் ஏறிட்டுப் பார்த்தாள். பிறகு அந்தரங்கமாக, "நான்...நான்..." என்றாள். அவளால் பேச முடியவில்லை. அவனுக்கு அதெல்லாம் உண்மைதானா என்று சந்தேகம் வந்துவிட்டது. அவன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். பீச்சு மணலில் உட்கார்ந்த பின்னால் கூட அவன் ஐயந்தீரவில்லை.

அவள் பேசப் பேச வாயையே பார்த்துக் கொண்டிருந்தான். மங்கிய நிலவொளியில் அவள் அழகாக ரொம்பவும் நேர்த்தியாகக் காட்சியளித்தாள். பிறகு மீண்டும் பேச ஆரம்பித்தாள். அவன் மனம் அடித்துக் கொண்டது. பிடியை இன்னும் அழுத்தினான். அவள் நெருங்கி வந்து அவனோடு இணைந்து உட்கார்ந்து கொண்டாள்.

வெகு நேரம் கழித்துத்தனியாக அவன் வீட்டிற்கு திரும்பினான். தன் டைரியை எடுத்து மிகவும் வேகமாக "பிந்து—ஒரு பெண்" என்று எழுதினான். அதற்குக் கீழே இரண்டு முறைகள் கோடு கிழித்தான். 'ஒரு பெண் எல்லா சந்தர்ப்பங்களிலும் பெண்ணாகவே நடந்து கொள்கிறாள்'—டைரியை மூடி வைத்துவிட்டு, விளக்கை அணைக்காமலேயே தூங்க ஆரம்பித்தான்.

காலையில் எழுந்ததும், பிந்து கேட்டிருந்த ஒரு புத்தகம் நினைவிற்கு வந்தது தேட ஆரம்பித்தான். வைத்த இடம்ஞாபகமில்லை. அலமாரியைத்திறந்தான்; மூடினான். சுவரை ஒட்டியிருந்த பலகையைப் பார்த்தான். பின்னால் வைத்ததாக ஒரு நினைவு. கையை விட்டு எட்டி புத்தகங்களை எடுத்துப் பார்த்தான் கிடைக்கவில்லை.

கட்டிலுக்குக் கீழே குவிந்திருக்கும் புத்தகக் குவியலில் ஒருவேளை அது கிடைக்குமோஎன்று குனிந்தான். மேலாக இருந்த இரண்டு புத்தகங்களை எடுத்தான். அடியில் கரையான்கள் ஊர்ந்து கொண்டிருந்தன. இன்னும் இரண்டு புத்தகங்களை எடுத்தான். கரையான்கள் அதிகமாகத் தென்பட்டன. பல புத்தகங்களை உருவியெடுத்தான். கீழே கரையான் அரித்திருந்தது. ஈரமண் படிந்திருந்தது. அடுத்த புத்தகத்தை எடுத்தான். பாதிப் புத்தகத்தின் உருவே தெரியவில்லை. அவன் அதையே ஒரு கணம் பார்த்துக் கொண்டிருந்தான். விரல் இடுக்குகளில் கரையான்கள் குறுகுறுத்தன. பிறகு வேகவேகமாக அந்த அடுக்குப் புத்தகங்களையும் தள்ளினான். கரையான்கள் அங்குமிங்குமாக ஓடின. அவன் குனிந்து புத்தகத்தைப் பிரித்தான். கரையான் அவன் கையிலும், காலிலும், மார்பிலும் ஊர்ந்தன. கையிலிருந்த புத்தகத்தை வீசியெறிந்தான். கால்களைத் தரையில் உதைத்துக் கொண்டான். கைகளைத் தட்டி உதறிக் கொண்டான்.

புத்தகங்களின் மேல் விரைந்து அப்படியும் இப்படியுமாக ஊரும் கரையான்களையே அவன் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். ஓரமாகஇருந்த புத்தக அடுக்கை அதன் மீது வீசி யெறிந்துவிட்டு நாற்காலியில் போய் உட்கார்ந்தான்.

சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டான். தீக்குச்சியைக் கரையான் மீது வீசியெறிந்தான்.

ஒரு சிகரெட் தீர்ந்தது. மயக்கம் வருவது மாதிரி இருந்தது. பிரம்பு நாற்காலியில் தலையைச் சாய்த்துக் கொண்டான். அவன் மேலே கரையான்கள் ஊர ஆரம்பித்தன.

# அபிப்பிராயங்கள்

'மௌனி'யின் 'தவறு' என்னும் 'கதை'(!), அதற்குத் தர்மு சிவராமின் 'விளக்கம்'(!), ஆர். சுவாமிநாதன் 'மௌனி'க்குக் கொடுத்துள்ள சார்டிபிகேட் (!), எல்லாம் படித்தேன்.

'பால்காரி' milk—காரி அல்ல, sex-காரி தான் என்ற விஷயத்தைத் தர்மு சிவராம் சொல்லக் கேட்டபோது ஒரு துப்பறியும் கதையின் மர்மத்தைப் பாதிக் கதையிலே கண்டு பிடித்துவிட்ட திருப்தி ஏற்பட்டுவிட்டது.

மௌனிக்கு நோபல் பரிசு என்ருல் தர்முவுக்கு ஒன்றும் இல்லையா?

சுவாமிநாதனின் சர்ட்டிபிகேட்டில் ஒரு திருத்தம் செய்ய விரும்புகிறேன். மௌனி நோபல் பரிசுக்குத் தயாராகிக் கொண்டு வருகிருர். இன்னும் பூரணத் தகுதி பெறவில்லை. அவருடைய கதையின் விளக்கம் கதையைவிடப் பெரியதாக புரியாததாக ஆகும்போது அந்தத் தகுதி வந்துவிடும் அவருக்கு.

எனக்கு ஒரு திருப்தி; சாகித்ய அகடாமிக்கும், ஞானபீடத்துக்கும் ஏற்ற சாதாரண எழுத்தாளனையல்ல, நோபல் பரிசுக் கேற்ற 'genius' ஐத் தான் என்னுல் புரிந்து கொள்ள முடியவில்லை என்பது குறித்து.

சு. கிருஷ்ணமூர்த்தி,
கல்கத்தா-29.

சென்ற இதழில் வெளியான இரு கவிதைகளுமே அற்புதம். குறிப்பாக பாலகுமாரனை சரியாக அறிமுகப்படுத்துகிறது, 'கசடதபற'.

தேவகோட்டை வா. மூர்த்தி
காரைக்குடி.

இன்றைய சமூகத்தில் 'நாற்காலிக்காரர்' (மிதவாதிகள்) போன்ருேர் எவ்வாறு 'வேடிக்கை பார்ப்பவர்'களால் (சந்தர்ப்பவாதிகளால்) உண்டாக்கப்படும் குழப்பங்களில் சிக்கி அழிகிருர்கள் என்ற உண்மையை 'dramatic appeal' உடன் ந. முத்துசாமி படைத்த விதம் பாராட்டுதற்குரியது.

பாலகுமாரனின் 'வெப்பத்தை' நாமும் சேர்ந்து அனுபவிக்கும்போது, ஒரே 'thirsty' ஆகிவிடுகிறது.

சௌகார் நாராயணன்,
**KGF-6.**

புதுமை இலக்கியப் பசிக்கு 'கசடதபற' அளிக்கும் தீனி பத்தாது. ஒன்று பக்கங்களைக் கூட்டுங்கள். அல்லது கால இடைவெளியைக் குறையுங்கள். டாக்டர் பிராங்க்ளின் புதுமைப்பித்தனைக் கணக்காகப் புரிந்து கொண்டிருக்கிருர். ந. முத்துசாமி 'நாற்காலிக்காரர்'ரை மிகவும் சிரமப்பட்டுப் பிரசவித்ததுடன் வாசகர்களையும் சிரமப்படுத்திவிட்டார். பாலகுமாரனின் 'வெப்பம்' அருமையான இயற்கைப் படைப்பு.

ஆ. கோவிந்தராசன்,
கோவிந்தநகரம்.

'நாற்காலிக்காரர்' அப்பட்டமாகவும், மேலெழுந்தவாரியாகவும் உள்ளது. கேலிக் கூத்துத்தான்; இருந்தாலும் அதிலும் ஒரு 'முறை' உள்ளது.

பிராங்க்ளினின் உரையைப் பார்த்தேன். 'பித்தனை'ப் பற்றிய அவரது தற்காலிக அபிப்பிராயம் மனதுக்கு இதமாக உள்ளது.

ஜி. நாகராஜன்,
மதுரை.

ந. முத்துசாமியின் நாடகத்தை நன்கு ரசிக்க முடிந்தது. இதுபோல் இன்னும் எதிர்பார்க்கிறேன். இவரை இங்கு எல்லோரும் புரிந்துகொள்ளவோ, தெரிந்து கொள்ளவோ இல்லை என்பது பற்றிக் கவலை வேண்டாம். இரண்டு லட்சம் average வாசகர்களைவிட இருநூறு புத்திசாலிகள் புரிந்து கொள்ளுவதுதான் முக்கியம்.

முடிவில் அக்கம் பக்கத்தைப் பற்றி ஒரு வார்த்தை: உங்கள் எழுத்தின் பின்னுல் மறைந்திருக்கும் அந்தக் 'கோபம்' எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது.

சுப்ரமண்ய. ராஜு,
சென்னை-16.

எனக்கு ஒங்க பத்திரிகை பேரு போட்டிருக்கிற ஊசி ஊசியான, உருண்டையான 'கசடதபற'ங்கிற எழுத்து டிசைன் ரொம்பப் பிடிச்சிருக்கு. சிதம்பர கிருஷ்ணன் ஓவியம் 'டெரிபிள்.' அந்த ரெண்டு கண்களிலேயும் கீழே ஒதுங்கி ஒட்டிப் போய் கெடக்கே ரெண்டு கண்மணிகள், அதுக்கே ஆயிரம் விதமான அர்த்தங்கள் சொல்லிக்கிடலாம்.

ஆல்பர்ட் ஃபிராங்க்ளின் புதுமைப் பித்தனை 'ஒரு நலிவுற்ற மேதை'ன்னு புதுசா ஒரு வாசலைக் காண்பிச்சிருக்கார்.

'நகுமூகு'வின் நாற்காலிக்காரர் ஒரு நீண்ட படைப்பு. 'கருப்புத் தொப்பி' குட்டன் ஒரு 'ஸீரியஸ் லுக்'.

உம்முடைய புலம்பல் ஏன் அரைப் பக்கத்துக்குள்ளேயே முடிஞ்சிட்டு? இன்னும் ஒரு அரைப் பக்கம் எழுதியிருக்கலாமே.

உ. நா. ராமச்சந்திரன்,
திருநெல்வேலி-2.

## நானுமென்னெழுத்தும்

நின் கைவசம்
என் கைப்பிரதி

"இதனையெழுது" என்ருய்
எழுதினேன்.

"இதனையழி" என்ருய்
"அழித்தேன்"
"இதனையிவ் வண்ணமெழுது" என்ருய்
சொன்னவண்ணமே செய்தேன்.

இதுவென்ஞல்
இதுவென் பெயர்
இது வென்னெழுத்து.
விமர்சனமும் விரைவில் வந்தது.
"ஆ என்ன வெழுத்து" என்ருரொருவர்
"ஆ இதுவன்ரே வெழுத்து"
என்ருரொருவர்.
என்னெழுத்தில் நானில்லை;
என்ருலுமென் பெயருண்டு.
எழுதியெழுதி அழித்தேன்
அழித்து அழித்து ஆளானேன்.
விமர்சகரும் சொல்லி விட்டார்.
இல்லா ததையெல்லாம்
உண்டென்று
சொல்லி விட்டார்.

மாமுனி பரமஹம்ஸன்
அவன் மாபெரும் சீடன்
சொன்ஞன்
"மாயை யென்பது
மன்பதையனுபவம்."
மாயையென்னெழுத்து
மாமாயை
என் வாழ்வு.
என்ருலுமென்ன
இது வென்ஞல்
இதுவென்பெயர்.
இது வென்னெழுத்து.

—"நகுலன்"

## கனிவு

—யெவ்டுஷெங்கோ

இதை
இப்படியே விடக் கூடாது
இவ்வளவு கொடுமைக்கும் பின்ஞல்
எப்படி என்று வழக்கில் வந்தது இது?
தெரிந்தே ஜீவனை ஒதுக்கி,
தெரிந்தே சவத்தைப் பேணுவது
தோள்கள் தளர்ந்து போதை மயக்கில்
ஒருவர் ஒருவராக அவர்கள் நழுவுகிருர்கள்:
மயானப் பிரசங்கிகள்
வரலாற்றிடம் இதமாகப் பேசுகிருர்கள்.
எது பறித்தது மாயகாவ்ஸ்கியின் உயிரை?
எது இருத்தியது அவன் விரலிடுக்கில்
துப்பாக்கியை?
அந்த அவன் குரலுக்கு; அந்தத் தோற்றத்
துக்கு
எப்பொழுதாகிலும் அவர்கள் வழங்கி
யிருப்பார்களேயாஞல் அவன் வாழ்நாளில்
எள்ளளவு கனிவை...
மனிதர்கள் வாழ்கிருர்கள்: மனிதர்கள்
விஷமிகள்:
கனிவு செத்தபின் வரும் சீர்.

—தமிழில்: நா. ஜெயராமன்

## ரத்தச் சொந்தம்

கைகள் காதலித்த
கண்ணுடித் தம்ளர்,
காதலை ஏற்காதென்
காலடியில்
நொறுங்கிச் சிதறியது.
உடைந்த துகள்கள்
காலில் குத்தி
உறவாகி விட்டன
என் ரத்தத்தோடு.

—கலாப்ரியா

# புதிய நார்ஸிசிஸ்டுகள்

## (The Neo-Narcissists)

ஆர். சுப்பிரமணியன்

உலகில் இதர பகுதியின் இலக்கியத்தில் நிகழ்வனவற்றைக் கூர்ந்துகவனித்துப் புதியதாக இலக்கியமாகச் செய்யுங்கள்' என்ற ஆசிரியரின் ஆக்ரோஷ கோஷத்துடன் ஆரம்பிக்கப்பட்ட 'கசடதபற' இந்த ஆறு இதழ்களில் என்ன சாதித்திருக்கிறது என்று, அதிகம் படித்த—ஆனால் அதிகம் எழுதாத, அதிகம் விமரிசிக்காத—ஒரு சாதாரண புத்தகப் புழுவின் மெல்லிய உமிழ்நீரால் இந்தக் கட்டுரையை எழுதுகிறேன்.

'வாசன்மகனுக்கென்றால் மட்டும் அச்சுப்பொறிகள்
அடிக்குமோ?
முத்துச்சாமி போன்றவர் சொன்னால்
மாட்டேனென்று மறுக்குமோ?

என்ற ஊழிக்கூத்துடன் ஞானக் கூத்தன் துவக்கி வைத்தார். குறளிலும் சிலம்பிலும் தொடங்கி குமுதம் வரை சோரப்படுத்தப்பட்ட ரஸிகர்களைக் கசடதபற அக்னிப்ரவேசம் செய்யவைத்துப் புத்தமுது படைக்கும் என்று என்னைப் போன்ற சராசரியில் சற்று உயர்ந்த வாசகர்கள் ஒரு magnum opus ன் ஜாஜ்வல்யத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் 'கல்கி வண்டி வண்டியாக எழுதினார்; குமுதமும' கலைமகளும் தூரம்போன. தூரம் போய்க் கொண்டிருக்கிற அம்மாமிகள் படிக்கத்தான் லாயக்கு; கதிருக்கு இலக்கியம் மூன்றாம் பக்ஷம் அல்லது கடைசிப்பக்ஷம்; கல்கி பத்திரிகை ரா.கியின் நாவலை இரண்டாம் தடவைப் பிரசுரித்து மானக்கேடு தேடிக் கொண்டது, என்றெல்லாம் 'அடுத்தவன் பெண்டாட்டிக்கு முன் பல் நீளம்' அல்லது 'எனது நண்பனின் மனைவி படுத்துப்பணம்சேர்க்கிறாள்' என்பது போன்ற தன் வளர்ச்சிக்கு, தன் பெருமைக்கு, தன் பிரகாசத்திற்குப் பிரயோஜன மற்ற விமரிசனங்களில் கசடதபற இறங்கிக் கொண்டு ஏற்கனவே மெலிந்த தனது பதினாறு பக்கங்களில் பலவற்றை வீணாக்கிக் கொண்டிருப்பது கண்டு மனம் வருந்துகிறேன். இதழுக்கு இதழ் அடுத்தவர்களைக் கரித்துக் கொட்டுவது மூலம் ஒரு பத்திரிகை தன்னை உயர்த்திக் கொள்ள முடியுமா என்று எனக்கு சந்தேகமாக இருக்கிறது. ஆல்பர்ட் கேமு, பிரான்ஸ் காஃப்கா, ஜேம்ஸ் ஜாய்ஸ் போன்றவர்களின் எழுத்துக்களைச் சிறப்பித்து அதுபோல் நாங்களும் செய்வோம், பழையபாட்டையை உதாசீனம் செய்து புதிய வழி வகுப்போம் என்பது போல ஒவ்வொரு இதழிலும் ஆசிரியர்கள் தங்களின் புறநிலையைப் பிரகடனப் படுத்திக் கொள்கிறார்கள்.

காலின் வில்ஸனின் 'Outsiders' என்பது போல தங்களை அறிமுகப் படுத்திக் கொள்கிறார்கள். ஆனால் காலின் வில்ஸனின் 'Outsider' எந்த இடத்திலும் 'Insider'களைத்தூற்றியதில்லை. 'Insider'களின் பழைய தத்துவங்களைக் குத்திக்காட்ட முற்பட்டதில்லை. மாறாக தனது சுய படைப்புகள் மூலம் தனது பிரக்ஞையில் ஜனித்த புது இலக்கியங்கள் மூலம் தன்னை அனைவரும் (தன்னை வெறுக்கும் 'Insider' களும் கூட) அறியும்படி உயர்த்திக் கொள்ள முற்படுகிறான்.

இந்த positive approach-ஐ கசடதபற புரிந்து கொள்ள வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். ஆல்பர்ட்கேமு தன் காலத்தில் வாழ்ந்து சாதாரண இலக்கியங்கள் படைத்துப் பணமும், புகழும் சேர்த்த மற்ற எழுத்தாளர்களை ஒருபொழுதும் சாடியதில்லை. ஜேம்ஸ் ஜாய்ஸ் தனது ''யுலிஸஸ்'' இங்கிலாந்தில் தடை செய்யப்பட்ட பொழுது அதே காலத்தில் 'சற்று சாதாரணமாக எழுதிக் கொண்டு' பணமும் புகழும் சேர்த்த சாமர்செட் மாமை இகழ்ந்துரைத்ததில்லை. நீட்ஷே ''தனது தத்துவங்கள் ஏன் மக்களுக்குப் புரியவில்லை? அதன் காரணத்தை அறிந்து செயல் படுவேன்'' என்று முயற்சித்தாரே ஒழிய தனது காலத்தில் கிறிஸ்துவத்தை உயர்த்தி Parsifal எழுதிய வாக்னரின் (Richard Wagner) புகழைக் கண்டு மறுகவில்லை.

மேற்கண்ட மூன்று ஜோடியிலும், ஜேம்ஸ் ஜாய்ஸுக்கும், ஆல்பர்ட் கேமுவுக்கும், நீட்ஷேக்கும் அவர்களது எழுத்துக்கள் மக்களுக்கு(இலக்கியப்பிரக்ஞை!) இல்லாத ஸாதாரணர்களுக்குப் புரியாதிருந்துஅதனால் பெருமை அடையாமல் (மூவரும் தங்கள் சாவுக்குப் பின்னரே புகழ் அடைந்தனர்) இருந்த பொழுதும் தனது காலத்தில் ''தூரம் ஆன பெண்களுக்கான'' கதைகள் எழுதிய ஆசிரியர்களையும், பத்திரிகைகளையும் அவர்கள் திட்டித் தீர்த்துக் கொண்டதில்லை.

யுலிஸஸ்பற்றிவிட்டில்ரெவ்யூ எழுதியதை சொல்லி கசடதபறவும் ''நானூறுரஸிகர்கள் இருந்தாலும்தனது தரத்தில் வீம்பாக நின்று கொண்டு Silent Majority யுடன் சமரசம் செய்து கொள்ளாத பத்திரிகை'' என்று நா. கி. சொல்லாமல் சொல்லுகிறார். அவருக்கு ஒன்று சொல்வேன். மூன்று லக்ஷங்கள் விற்கும்—சோரம் போன, லக்ஷியம் இல்லாத பிரக்ஞை இல்லாத, நடுக்கிணற்றில் நிகழ்காலம் காண்கிறசினிமாவிஷயங்களைப் போடுவதின் மூலம் மக்களின் நரம்புகளை தளர்வடைய செய்கிற பத்திரிகைகளைத் திட்டித் தீர்த்துக் கொள்ளுவதன் மூலம் கசடதபறவின் புறநிலைப்பணி (outsider message) நிறைவடையப் போவதில்லை. மாறாகப் புதிய கதைகள், கவிதைகள் மற்றும் பல இலக்கிய உத்திகளைப் பெருமையுடனும் சுய நம்பிக்கையுடனும் பிரசுரித்தே கசடதபற வளர முடியும்.

கணையாழியின் அங்கதம் இல்லாத (non-satirical) ஒரு புகழுரையைக் கூட 'அது தன்னையும் கலைமகளையும் இணைத்துச் சொல்கிறது' என்ற ஒரு காரணத்திற்காக, கசடதபற வெறுத்து ஒதுக்கும்படி கசடதபற இதுவரை தனது 96 பக்கங்களில் என்ன சாதித்து விட்டது என்று புரியவில்லை.

பத்துவருஷ தவத்திற்குப் பிறகு ஜாதுஷ்டிரன் சூரியனின் பிரகாசத்துடன் குகையிலிருந்து வெளியே வந்தான். அவன் பார்த்த பார்வையிலே சகலBlack Magic க்குகளும் அறிந்த, பயிற்சி பெற்ற கழைக் கூத்தாடி கயிறு அறுந்து கீழே விழுந்தான். அது போல தனது யோகம், ஞானம் இவற்றால் பிரகாசம் பெற்ற கசடதபற எழுத்தாளர் குழுவினர் தங்கள் பார்வையால்—இலக்கியப் பார்வையில் — ''கழைக் கூத்தாடிகளை'' நிலைதடுமாறச் செய்ய வேண்டுமேயன்றி அவர்களிடம் சென்று ''உங்கள் கயிற்றை அறுத்து உங்க

ளைக் கீழே விழச் செய்வேன்'' என்று கூச்சல் போடுவதில் பிரயோஜனமில்லை. எமர்ஸனின் கட்டுரையில் படித்த ஒரு கவிதைக் குஞ்சு நினைவுக்கு வருகிறது.

I was a Gem conceal'd
Me, my burning ray reveal'd

இது கசடதபறவின் குறிக்கோளாக இருக்கட்டும்.

(நம்முடைய இலட்சியங்கள் இரண்டு. ஒன்று இலக்கியம் படைப்பது. மற்றொன்று படைக்கப்பட்டிருக்கும் இலக்கியத்தை விமர்சிப்பது. கல்கி, மு. வ., கி. வா. ஜ, ஜெகசிற்பியன், சாண்டில்யன் போன்றவர்கள் படிப்பதற்கு சுவாரஸ்யமான விஷயங்களை எழுதி நேரான நிஜ வாழ்க்கையைக் காண மறந்தவர்கள் என்பதால்தான் அவர்களை விமர்சிக்கிறோம்.

இந்தத் தலைமுறையினர் படைப்பதோடு மட்டும் திருப்தி யடைவதில்லை. போன தலைமுறையினரின் சாதனையும், வாசக அபிப்ராயங்களையும், உரைத்துப் பார்க்கிறார்கள். விமர்சனம் இலக்கியத்திற்கு மிகவும் அவசியமானது. சரியான விமர்சனம் இல்லாததால் தான் மூன்றாம் தரமான, நான்காம் தரமான எழுத்துக்கள் முதல்தரமான எழுத்துக்களாக ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ளன.

இங்கு இன்னொன்றையும் நினைவு படுத்திக் கொள்ள வேண்டும். சாமர்செட் மாம் தன்னுடைய இலக்கிய அந்தஸ்து பற்றிச் சொல்லிக் கொள்ளும் போது பால்ஸாக், டால்ஸ்டாய், தாஸ்தா வெஸ்கி, இப்சன், டிக்கன்ஸ், மாபசான் இவர்களெல்லாம் முதல் தர எழுத்தாளர்கள் என்றால் தன்னை இரண்டாம் தர எழுத்தாளன் என்று சொல்லிக் கொண்டார். நோபல் பரிசு ஹெமிங்வேக்குக் கொடுக்கப்பட்டதே அன்றி மாமுக்குக் கொடுக்கப்படவில்லை. ஆனால் தமிழில் அகிலன், சோமு, சீனிவாச ராகவன், கி.வா.ஜ. முதலானவர்களுக்குத்தான் சாகித்ய அகாடமி பரிசு தரப் பட்டது. ந. பிச்சமூர்த்தி, மௌனி, க. நா. சு., நாரண துரைக்கண்ணன் ஆகியோர்களுக்குத் தரப்படவில்லை. இதைச் சொல்லுவது கோபமாகாது. அடுத்தவரை தூஷிப்பதாகாது. நம்முடைய கோபமெல்லாம் சிறந்த நிஜமான படைப்பு கவனிப்பின்றி போவது குறித்துதான்.) ●

---

## வானொலியில் புதுக் கவிதை

சென்னை வானொலியில் புதுக் கவிதை பற்றிய கட்டுரைகள், உரையாடல்கள் முதலியவை ஒலி பரப்பப்பட இருக்கின்றன. 'கசடதபற' வாசகர்களுக்கு அறிமுகமான எழுத்தாளர்கள், கவிஞர்கள் பங்கு பெறுகிறார்கள்.

ஞானக்கூத்தன்:
'கவிதை என்னை எவ்வாறு கவர்ந்தது?' (கட்டுரை)
*6-5-71 — நேரம்: இரவு 7-15*

பாலகுமாரன், எஸ். வைத்தீஸ்வரன்:
'இன்றைய கவிஞர்கள் இலக்கிய ஹிப்பிகளா?' (உரையாடல்)
*12-5-71 — நேரம்: இரவு 7-15*

ஆர். சுவாமிநாதன் (ஐராவதம்):
கவிக்குரல்—தான் எழுதிய கவிதைகளை வழங்குகிறார்
*19-5-71 — நேரம் இரவு: 7-15*

ந. மகாகணபதி:
'அண்மையில் நான் படித்தவை'
*10-6-71 — நேரம்: இரவு 7-15*

# சென்ற ஆண்டின் சிறந்த

சென்னையில் நர்ஸரிப் பள்ளிகளுக்கு அடுத்ததாக இலக்கியக் கூட்டங்களுக்கான அமைப்புகள்தான் வெடித்துத் தோன்றிப் பரவியிருக்கின்றன. இலக்கியக் கூட்டங்கள் கூட்டுவது எளிதான காரியம் ஆகி விட்டது. இக்கூட்டங்களின் அமைப்பாளர்களும், இவற்றில் பேசுபவர்களும் இலக்கியம் என்பதன் பொருள் தெரியாதவர்களாக, சடங்குப் பிரியர்களாக சொற் பந்தாட்டம் ஆடுபவர்களாகவே இருக்கின்றனர்.

இலக்கியத்தை அணுகுவது அவ்வளவு எளிதல்ல; ஒரு ஆழ்ந்த நம்பிக்கை, அடிப்படை அழகுணர்ச்சி, சுயசிந்தனை, தைரியம் இவ்வளவும் இலக்கியக் கூட்டங்களை அமைக்கவும், அவற்றில் பேசவும் அவசியமாகின்றன. ஆனால் எக் கூட்டமும் இவற்றில் எதையும் காட்டுவதில்லை.

இலக்கியச் சிந்தனை ஒரு அமைப்பு: அழகான அட்டையுடன் நல்ல அச்சில், குறைந்த விலையில் ஒரு கதைத் தொகுப்பை (பின்னணி) * வெளியிட்டிருக்கிறது. ஆனால் ''பின்னணி''யின் தரத்தைப் பார்க்கும்போது அது இலக்கியத்திற்கான அமைப்பாகத் தெரியவில்லை. இலக்கியச் சிந்தனை அடிப்படையான தவறைச் செய்திருக்கிறது. முதலில் பேனா பிடித்தவர்களெல்லாம் எழுத்தாளர்கள் என்றெண்ணி அவர்களை அழைத்து அம்மாதத்தியச் 'சிறந்த சிறுகதை'யைத் தேர்ந்தெடுக்கச் சொன்னது.

இப்புத்தகத்தில் இருக்கும் பன்னிரண்டு கதைகளைப் பாருங்கள். பன்னிரண்டில் ஏழு மிக மோசம். (ஆசிரியர்கள்: வசுமதி ராமசாமி, அகிலன், வையவன், வ. சா. நாகராஜன், ஏ. எஸ். ராகவன், வல்லிக்கண்ணன், ஸ்ரீவத்ஸன்.) ஒன்று (ஜீவ்ஸ்) pseudo-writing. முதல் குறிப்பிட்ட ஏழில், ஆறு (வல்லிக்கண்ணனைத் தவிர்த்து) அப்பட்டமான formula கதைகள். அகிலனும் ராகவனும் 'இப்படிப்பட்ட கதைகள் எழுதுவதில் தங்களை யாரும் மிஞ்சமுடியாது என்று காட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

இவற்றைத் தேர்ந்தெடுத்த 'எழுத்தாளர்களும்' தாங்கள் குறைந்தபட்சம் புத்திசாலித் தனமான வாசகர்களாகக்கூட இல்லை என்பதை நிரூபித்துவிட்டார்கள். இலக்கியப் பிரக்ஞையற்ற, இரண்டு வெறும் காகிதப் பண்டிதர்கள் 'பின்னணி'யைத் தேர்ந்தெடுத்திருப்பதும் இதைத்தான் உறுதிப்படுத்துகிறது. இன்னொன்றையும இங்கே சேர்த்துக் கொள்ளலாம்; பேராசிரியர் சீனிவாசராகவன், இந்திரா பார்த்தசாரதியின் 'பயணத்தி'ல் plot ஏதும் இல்லை என்று சொன்னது. இலக்கியம் என்பதன் அரிச்சுவடிகூட இவர்களுக்குத் தெரியாது. 'எடுப்பும் தொடுப்பும் முடிப்பும்'தான் இவர்களுக்கு Obsession ஆக இருக்கின்றன. ஆனால் இவர்கள்பேசுவதோ நமக்கு பிரமிப்பைத் தரும். இவர்கள் தேர்ந்தெடுத்த formula கதைகளுக்கான விமரிசனங்களில் சில:

''தமிழ் மண்ணின் நீண்ட நெடுங்காலத்து மரபு வழிவந்த நம்பிக்கையையும், அறத்தையும் கதையின் உட் பொருளாகக் கொண்டது''

—சிவன் சொத்துபற்றி அகிலன்

## கதை

"அதில் ரசனை பொங்குகிறது; உத்தியின் உறுமல் இல்லை"

—எரிமலை பற்றி வாசவன்.

"கதையின் எடுப்பும், தொடுப்பும், முடிவும் ஆசிரியரின் கலைத்திறனை எடுத்துக் காட்டுகின்றன".

—பின்னணி பற்றி எழில் முதல்வன்.

இத்தொகுப்பில் மூன்று நல்ல கதைகள் (ஆசிரியர்கள்: நகுலன், இந்திரா பார்த்தசாரதி, ஆர். சூடாமணி) இருக்கின்றன. இன்னொரு கதை (ஆசிரியர்: கே. ராமசாமி) இலக்கியத் துடிப்பை நன்ருக உணர்த்தினலும் ஒழுங்கும், ஒருங்கிணைப்பும் இல்லாதகாரணத்தால், நல்லபடைப்பாக உருவாகவில்லை. இக்கதைகள் இத் தொகுப்பில் இடம் பெறக் காரணம், இவற்றைத் தேர்ந்தெடுத்த மூவரும் (அசோகமித்திரன், சா. கந்தசாமி, எஸ். வைத்தீஸ்வரன்) அசல் இலக்கியக் கர்த்தாக்கள் என்பதுதான். இவர்களுக்கு எப்படி இடம் கிடைத்தது?

இலக்கியச் சிந்தனை அமைப்பாளர்கள் சொல்கிருர்கள்: "Compromise பண்ண வேண்டியிருக்கிறது; balance செய்ய வேண்டியிருக்கிறது"

ஆக, ஒருபுறம் formula கதைகளையும் இன்னொரு புறம் அசல் இலக்கியத்தையும் இவர்கள் balance செய்கிருர்கள். என்ன விந்தை! இலக்கியத்தில் compromiseக்கு இடம் ஏது? மேலும், இலக்கியம், பாலன்ஸ் செய்ய, கழைக் கூத்தாடியின் தொழிலா என்ன? இதிலிருந்து ஒன்று தெரிகிறது; இலக்கியச் சிந்தனைக்கு இலக்கியச் சிந்தனை கிடையாது. ஏதோ இரண்டு பிரிவுகளாக எழுதுபவர்கள் இருக்கிருர்கள் என்பது மட்டும் அவர்களுக்குத் தெரிகிறது. ஆனல் எது அசல், எதுபோலி எனற பிரக்ஞை அவர்களுக்கு இல்லை. ஊன்றிப் பார்த்தால் அவர்கள் போலி இலக்கியத்தைத்தான் இலக்கியம் என்று கொள்கிருர்கள் என்று படுகிறது. இல்லையென்ருல் சீனிவாச ராகவனை சிறந்த கதையைத் தேர்ந்தெடுக்க அழைப்பார்களா?

மார்ச்சு மாதக் கூட்டத்தில் 'சென்னைப் பல்கலைக் கழக வேந்தர் வாங்குவதற்கு நல்ல தமிழ்ப் புத்தகம் இல்லை என்று சொன்னுர்; இதோ அவருக்கு ஒரு புத்தகம்' என்று பொருள்பட திரு சிதம்பரம் கூறினர். உண்மைதான். சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு மிக மிக உகந்த புத்தகம்தான் இது. இதை வெளியிட்டதற்காக இலக்கியச் சிந்தனையும், இதை வாங்கி சென்னைப் பல்கலைக் கழகமும் மகிழ்ச்சியும், கௌரவமும் கொள்ளலாம்.

எஸ். ராமகிருஷ்ணன்

* பின்னணி — (சிறுகதைத் தொகுப்பு) இலக்கியச் சிந்தனை; சென்னை 30. விலை 2-50

---



## அக்கம் பக்கம்


அக்கம்பக்கம்
அக்கம்பக்கம்
அக்கம்பக்கம்
அக்கம்பக்கம்


உ. வே. சாமிநாதஐயர் பதிப்பித்திருக்கும் நூல் மாதிரியே வசனத்தில் அவர் எழுதியிருக்கும் நூல்களும் மிக முக்கியமானவை என்று எனக்குப் படுகிறது. இரண்டு மூன்று தலைமுறையினர் வாழ்க்கையைத் தெரிந்து கொள்ள அவர் நூல்களை விட்டால் வேறு கதி கிடையாது. அவர் எழுதியிருக்கும் ஸ்ரீ மீனட்சி சுந்தரம் பிள்ளை சரித்திரம் (இரு பாகங்கள்) சங்கீதவித்துவான் கனம் கிருஷ்ணையர் சரித்திரம், நந்தன்சரிதம் பாடிய கோபால கிருஷ்ண பாரதியார் சரித்திரம், வித்துவான் தியாகராஜ செட்டியார் சரித்திரம், என் சரித்திரம் (சுய வரலாறு)—எல்லாம் மறுபதிப்பு வருவது மிகமிக அவசியம். இவைகள் இப்போது கிடைப்பதில்லை. இது ஒரு காரணம்.

இன்னொரு காரணம்: கி. வா. ஜகந்நாதன, சாலை இளந்திரையன் திருப்பிச் சொல்வதை தவிர்க்கவும் அவர் புத்தகங்களுக்கு மறுபதிப்பு வரவேண்டும். இவர்கள் திரும்பத் திரும்பச் சொல்லி ஐயர் புத்தகத்திலிருக்கும் அழகையும், விஷயத் தெளிவையும், எளிமையையும் மழுங்க அடித்து விடுகிருர்கள்.

1933 இல் வெளியான ஸ்ரீ மீனட்சிசுந்தரம் பிள்ளை சரித்திரத்திற்கு 1938-இல் மறு பதிப்பு வெளிவந்தது. பிறகு பதிப்பு இல்லை. சமீபத்தில் மாணவர்களுக்காக ஒரு சுருக்கப் பதிப்பு வெளியாகி இருக்கிறது. சுருக்கப்பதிப்பு சுகமில்லை. முழுப் பதிப்பும் வருவது அவசியம்.

∴ ∴ ∴

பெரிய சிலை. மிகப் பெரிய சிலை. ஸ்டாலின் நாற்காலியில் கால் மீது கால் போட்டுக் கொண்டு சிரத்தையோடு ஒரு புத்தகத்தை வாசிக்கிருர். அந்தப் புத்தகத்தின் அட்டையில் 'அலெக்சாண்டர் புஷ்கின்' என்று எழுதியிருக்கிறது. புஷ்கினுக்கு நினைவுச் சின்னத்தை ஸ்டாலின் காலத்தில் இப்படி அமைத்ததாகக்கேள்வி. ஸ்டாலின் இப்போது இல்லை. ஆனல் ஸ்டாலின் மனோபாவம் இன்றைக்கும் இருப்பதை சமீபத்தில் சென்னையில் நடந்த 'தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்ற' பரிசளிப்பு விழாவில் அறிய முடிந்தது.

பரிசு பெற வந்த எழுத்தாளர்கள் கீழே அடக்கமாக அமர்ந்திருந்தார்கள். ஆனல் பரிசு வழங்கிய மாண்புமிகு கலைஞரும், மாண்புமிகு நாவலரும் மேடையில் பெரிய பெரிய மாலை போட்டுக் கொண்டு பூச்செண்டு வாங்கிக் கொண்டு அலங்காரமாக உட்கார்ந்திருந்தார்கள். அதிகாரி பரிசுபெற்றவர்களைக்கூவி அழைக்க, எழுத்தாளர்கள்பள்ளிக்கூட மாணவர்களைப் போல மேடை ஏறினர்கள். கழுத்தில் ஒரு சின்ன மாலை விழ, கலைஞர் பரிசை அளித்தார். பரிசு பெற்ற எழுத்தாளர்களை ஒரு வார்த்தை கூடப் பேச விடவில்லை. மந்திரிகள் அதிகாரிகள் பேச்சோடு கூட்டத்தை இனிது முடித்துக் கொண்டார்கள்.

இம் மாதிரி விழாக்களில் எழுத்தாளன்தான் முக்கியம். அவன் கௌரவமாக நடத்தப்பட வேண்டும் பரிசு பெறுகிறவர்தான் முக்கியம். கொடுக்கிறவர்கள் அல்ல.

இந்த விழாவில் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றத்தின் டைரக்டர் க. திரவியம் உதிர்த்த சில முத்துக்களில் சில இவை:

"நாவுக்கரசரும் தமிழை வளர்த்தார். நாவலரும் தமிழை வளர்க்கிருர்.

"கம்பரும் தமிழை வளர்த்தார். கலைஞரும் தமிழை வளர்க்கிருர்."

∴ ∴ ∴

'தமிழ் எழுத்தாளர் சங்கம்'—அப்படியொன்று ஒன்று செயல் படுவதாக யாருக்குமே தெரியாது. ஆனல் போனமாதம் அதனுடைய ஒப்பற்ற செயல் மூலம் திடீரென்று சங்கம் பிரபலமாகியது. 'கலைஞர் மு. கருணநிதி1970-ஆம் ஆண்டின் தலைசிறந்த எழுத்தாளர். இதற்கான விருதை பாரதப் பிரதமர் இந்திரா காந்தி வழங்குவார்' என்ற அறிவிப்புதான் அது.

1970-ஆம் ஆண்டில் தலைசிறந்த எழுத்தாளர் மு. கருணநிதி படைத்த தலைசிறந்த படைப்பு: 'நானே அறிவாளி' நாடகம்.

உலகமகாகவி என்று பாராட்டப் பெற்று அமெரிக்கர் மில்லரால் பரிசும் பெற்றுவிட்டகவிகருணநிதிக்கு தமிழ்எழுத்தாளர் சங்கம் தந்துள்ள 1970 இன் தலைசிறந்த எழுத்தாளர் என்ற பட்டம் அவரது ஆற்றலுக்கு மற்றுமோர் எடுத்துக் காட்டு. கன்னித் தமிழன்னை பெற்ற மாபெரும் சீதனம் கவி கருணநிதி.

கல் தோன்றி மண் தோன்ருக் காலத்திற்கு முன் தோன்றியமூத்த தமிழ் மிகவும் பாக்கியம் செய்த மொழி.

∴ ∴ ∴

இலக்கியச் சிந்தனை விழா எடுத்தது. சிறுகதை விழா. சென்னை ராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் நீதிபதி திரு. எஸ். மகராஜன் தலைமையில் நடந்தது. பேராசிரியர் திரு. அ. ஸ்ரீநிவாசராகவன் 1970 இன் சிறந்த சிறுகதையாசிரியரை அறிவித்தார். மதிப்புக்குரிய பேராசிரியரும் கனம் நீதிபதி அவர்களும் பெரிய மனிதர்கள். ரொம்பவும் உயர்ந்தவர்கள். தற்காலத் தமிழ் இலக்கியத்தில் எதுவும் தெரியாது என்பதை மிகுந்தசந்தோஷத்துடன் தெரிவித்துக் கொண்டு ஆனந்தமுற்றவர்கள்.

'டாக்டர் ஆல்பர்ட் ஃபிராங்க்ளின் 'தற்காலச் சிறுகதை' எழுத்தாளர்களில் ந. முத்துசாமிமிகவும் குறிப்பிடத்தக்கவர்; 'நடை' என்னும் காலாண்டு ஏடு அசல் இலக்கிய ஏடாக விளங்கியுள்ளது' என்ருர்.

தலைவர் கனம் நீதிபதி அவர்கள் எழுந்து, "முத்துசாமி யார்? நான் கேள்விப் பட்டதே இல்லையே. 'நடை'யை நான் பார்த்ததே இல்லை. நான் மட்டுமல்ல. பேராசிரியரிடமும் கேட்டேன். அவரும் முத்துசாமியைக் கேள்விப் பட்டதில்லை. 'நடை'யைப் பார்த்ததும் இல்லை என்று சொன்னர்" என்று பொங்கிப் பூரிக்கும் உவகையோடு கூறினர்.

இவர்களுக்கு முத்துசாமியைத் தெரியாததால் வேறு யாருக்கும் இழுக்கில்லை. புதுமைப் பித்தனைப் படித்ததில்லை. கு. ப. ரா. வைத் தொட்டதே இல்லை என்று சொல்வதால் நஷ்டம் யாருக்கு? அதுபோல் தான் இதுவும்.

இலக்கியச் சிந்தனை அமைப்பாளர்களுக்கு இலக்கியத்தைவிடவிழா எடுப்பதில் தான் ஆர்வம் அதிகமாக இருந்தது என்பதை அனுபவ பூர்வமாக உணர முடிந்தது.

∴ ∴ ∴

அடுத்ததாக ஒரு விஷயம். 'கசடதபற'வில் வெளி நபர்களுக்கும், புதிய எழுத்தாளர்களுக்கும் இடம் தருவது கிடையாது என்ற குற்றச்சாட்டை இராஜபாளையம் நண்பர் இ. ரா. கதைப்பித்தன்எழுப்பியிருக்கிருர். மூன்ருவது இதழ் தலையங்கத்தில் கூறியவைகளை இங்கு நினைவுபடுத்திக் கொள்ள வேண்டுகிறேன். சென்ற ஏழு இதழ்களில் அறிமுகமாயிருக்கும் நா. ஜெயராமன், கலாப்ரியா, ஆர். இராசேந்திர சோழன், அம்பை பாலன், வீனஸ், நீலமணி, ப. கங்கை கொண்டான் ஆகியோர்களும் இந்த இதழில் அறிமுகமாகும் நா. சேதுராமனும் நமக்குப் புதியவர்கள்.

'கசடதபற' ஒரு இயக்கம். புதிய திறமையைக் கண்டு பிடிக்க இது காத்துக் கொண்டிருக்கிறது. தென்படுகிற திறமைகளை எங்கள் பக்கம் இழுக்கவே பார்த்துக் கொண்டிருப்போம் என்ற வார்த்தைகளை இங்கு மீண்டும் சொல்லிக் கொள்கிருேம்.

∴ ∴ ∴

கடைசியாக சோவியத் ரஷ்யாவில் புத்தக விற்பனை பற்றிய சில சுவையான உண்மைகள்.

உலகத்தில் வெளியாகும் மொத்தப் புத்தகங்களில் நாலில் ஒரு பங்கு சோவியத் ரஷ்யாவில் வெளியாகிறது. தினசரி 3,500,000 புத்தகங்கள் வெளிவருகின்றன. இதன்படி ஒவ்வொருநிமிஷத்திற்கு 2400 புத்தகங்கள் தோன்றுகின்றன.

மார்க்ஸ் (Marx) ஏஞ்சல்ஸ் (Engels) இருவரின் புத்தகங்கள் 77 மொழிகளில் 84,000,000 பிரதிகள் வெளிவந்திருக்கின்றன.

ரஷ்யாவிலிருந்தும் மற்ற அயல் நாடுகளிலிருந்தும் வெளிவரும் புனைவியல் நூல்களுக்கு (fiction) சோவியத் ரஷ்யாவில் நல்ல வரவேற்பு இருக்கிறது. 1913 இல் 16,000,000 பிரதிகளாக இருந்த வெளியீட்டுத்துறை 1966 இல் 419,000,000 பிரதிகளாக முன்னேறியுள்ளது. சோவியத் ரஷ்யாவில் பேசப்படும் 89 மொழிகளில் புத்தகங்கள் வெளியாகின்றன.

—நா. கிருஷ்ணமூர்த்தி

Published by N. Mahaganapathy 47, Nallathambi Mudali Street, Madras-5. Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamoorthy No. 1, Devadi Sreet, Madras-4.